335

# நன்னெறிக் கழகம்
## கோவை




# வெள்ளி விழா மலர்



ஜூலை 1983

# நூற்றுக்கு நூறு தரமுள்ள

## உங்களின் சிறந்த துணிகளின் தேவைக்கு

100% பாலியெஸ்டர், ஷிபான் மற்றும் ஜார்ஜெட் புடவைகள்
சுப்ரபா, கேலக்ஸி, சுவர்ணு எமரால்ட், பொணுன்ஜா மற்றும் ருபி

100% பாலியெஸ்டர் பிளவுஸ் துணிகள்
அப்ஸரா

100% பாலியெஸ்டர் ஷர்ட்டிங்குகள்
சூப்பர் ஸ்டார், சுப்ரமெஸி, எக்ஸெலன்ஸி, எம்பெரர், ராயல் கோல்டு,
கோல்டு கிரௌன் மற்றும் லக்ஷ்மி ஸ்டார்

100% உயர்ரக பருத்திப் பாவாடைத் துணிகள்
சிட்டிஜென்

2X2 மற்றும் 1X1 பிளவுஸ் துணிகள்
பிரியா, ருப்மதி



**லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்**

உயர்தரமான, சிறந்த நூல் மற்றும் துணிகளின் உற்பத்தியாளர்கள்

JS

டெலக்ஸ்
கோயமுத்தூர்: 0855—212 கோவில்பட்டி: M. A. 0445—286 சிங்காநல்லூர்: 0855—236

டெலிகிராம்ஸ்
கோயமுத்தூர்: LAKSHMI கோவில்பட்டி: LAKSHMIMILL சிங்காநல்லூர்: RUKMANI

டெலிபோன்
கோயமுத்தூர்: 30251 to 30255 கோவில்பட்டி: 613, 614 சிங்காநல்லூர்: 87335 to 87337

ஸ்பின்டல்ஸ்: 2,14,560 லூம்ஸ்: 504

/60

# நன்னெறிக் கழகம்
# கோவை

(பதிவு செய்தது)




1956 - 1983

## வெள்ளி விழா மலர்

மலர் வெளியீடு : 9, 10—7—83 தேதி விழாவில்

இடம் : கோவை, பாப்பநாயக்கன்பாளையம் மணி மேல்நிலைப்பள்ளி கலையரங்கம்



## ஒரு சொல்

நம் நன்னெறிக் கழகத்தின் 'வெள்ளி விழா' மலர்

அழகு பொலிய
ஞானம் விளங்க
புனித மலராக
மணம் பரப்பக்

கட்டுரைகள் உதவிய அறிஞர் பெருமக்களுக்கும் விளம்பரங்கள் கொடுத்துதவிய வணிகப் பெருமக்களுக்கும், அழகாக அச்சிட்டு அளித்த 'பாக்கியம் பிரிண்டர்ஸ்' அவர்களுக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றி உரியதாகுக.

ம. ரா. போ. குருசாமி
தலைவர் மலர் வெளியீட்டுக் குழு




# சமர்ப்பணம்



நன்னெறிக் கழகம்
நாற்றங்காற் பயிராய்
இருந்த ஆதிகாலத்திலிருந்து
உரம் ஊட்டிக்
களை பறித்து
நீர் பாய்ச்சி -
பயிர் வளம் பெற
உதவியருளிய.........

அமரர்கள்
தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்
எஸ். மகராஜன்
அ. சீனிவாசராகவன்
சா. கணேசன்
சி ஆர். நடராஜன்

ஆகியோர்க்கு
நன்றி மலராக
இவ்வெள்ளிவிழா மலர்
அமைகின்றது.




# நன்னெறிக் கழகம்

(பதிவு செய்யப்பட்டது)




# நன்னெறிக் கழகம்

Regd. No. 103/1974

கோயமுத்தூர்

## புரவலர்கள்

வைஸ்யபூஷணம்
திரு P. A. ராஜு செட்டியார்

பத்மபூஷண்
திரு. T. S. அவினாசிலிங்கம் செட்டியார் B.A., B.L.

திரு G. K. சுந்தரம்

திரு N. மகாலிங்கம், B.Sc., F.I.E.

ஜஸ்டிஸ்
திரு R. செங்கோட்டுவேலன், B.A., B.L.

,, S. N. R. சின்னசாமி நாயுடு

,, A. L. கோவிந்தராஜுலு

திரு R. துரைசாமி நாயுடு, L.T.M. (Hons)

சிவநேசச் செல்வர்
திரு K. S. வீரண்ண செட்டியார்

Dr. G. பக்தவத்சலம், M.B., B.S.

,, கரணு V. எல்லைய செட்டியார்

,, S. N. நாராயணசாமி நாயுடு

திரு K. R. S. மணி, (M/s. K. R. & Sons)

,, N. பார்த்தசாரதி, B.A., B.L.

,, N. நடராஜன், B. Com.

திரு V. V. ஸ்ரீராமன்

,, P. S. பொன்னப்ப ஆச்சாரியார்






## மலர் அணி மணிகள்




மலர்ப் பொறுப்பு

டாக்டர் ம. ரா. போ. குருசாமி  திரு இருசுப்பிள்ளை



மேதகு திரு S. L. குரானு அவர்கள்

(தமிழக ஆளுநர்)

கோவை நன்னெறிக் கழகம் வெள்ளி விழாவை துவக்கி வைப்பவர்



திரு சி. சுப்ரமண்யம் அவர்கள்
(முன்னாள் மத்ய அமைச்சர்)
நன்னெறிக் கழகம் வெள்ளி விழாத் தலைவர்



திரு G. K. சுந்தரம் அவர்கள்
நன்னெறிக் கழகம் வெள்ளி விழா கமிட்டி தலைவர்



டாக்டர் J. துல்ஜாராம்ராவ் அவர்கள்
தலைவர், நன்னெறிக் கழகம், கோவை



திரு தா. பாபுராஜு அவர்கள்
செயலாளர், நன்னெறிக் கழகம், கோவை



1966-ஆ 10-வது ஆண்டு விழாவில் மாண்புமிகு திரு ம. பொ. சிவஞானம் தம்பதிகளுக்கு பாராட்டளித்து சஷ்டி அப்த பூர்த்திக்கு வாழ்த்தி கோவைக்கிழார் திரு C. M. இராமச்சந்திரன் செட்டியார் பொன்னுடை போர்த்துகிறார்



1966-ஆ 10-வது ஆண்டு விழாவில் வாகீச கலாநிதி திரு கி. வா. ஜகந்நாதன் தம்பதிகளுக்கு சஷ்டி அப்த பூர்த்தியை முன்னிட்டு வாழ்த்தி கோவைக் கிழார் பொன்னுடை போர்த்துகிறார்.



1961-ஆ 5-வது ஆண்டு விழாவில் திரு T. M. பாஸ்கரத் தொண்டைமான் 'தமிழ் அறிஞர்' என்று பாராட்டப்பட்ட கோவைக்கிழார் திரு C. M. ராமச்சந்திரன் செட்டியார், தலைவர் திரு T. M. நாராயணசாமிப்பிள்ளை, பேராசிரியர் அ. ஸ்ரீநிவாசராகவன், தொண்டர் குலசேகரன் திரு சா. கணேசன், ஜஸ்டிஸ் திரு S மகராஜன்.



1961-ஆ 5–வது ஆண்டு விழாவில், 'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற நூலை வெளியிட்ட ஆசிரியர், கலைமணி திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமானுக்கு வைஸ்ய பூஷணம் திரு P. A. ராஜு செட்டியார் பொன்னாடை போர்த்துகிறார்.



1967-ஆ 11-வது ஆண்டு விழாவில் பன்மொழிப்புலவர், பேராசிரியர், திரு T.P. மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை தலைமையில் பேராசிரியர் திரு அ. ச. ஞான சம்பந்தம் அவர்களுக்கு ''தமிழ் அறிஞர்'' என்ற பாராட்டு விழா



1971-ஆ 15-வது ஆண்டு விழாவில் ''தமிழ் அறிஞர்'' என்று பாராட்டப்பட்டவர்கள் திரு P. S. G. G. கோவிந்தசாமி நாயுடு, திரு பெரியசாமி தூரன், ஜஸ்டிஸ் திரு M M. இஸ்மாயில், பாராட்டியவர்: பத்மபூஷன் திரு T.S. அவினாசிலிங்கம் செட்டியார், விழாத்தலைவர் திரு அ. ஸ்ரீநிவாச ராகவன், ஜஸ்டிஸ் திரு S. மகராஜன்



மேதகு ஜஸ்டிஸ்
திரு **S.** நடராஜன், B.A.,B.L.
அவர்கள் கோவையிலிருந்து
சென்னைக்கு மாற்றலாகிச்
சென்றபோது வைஸ்ய
பூஷணம் திரு **P. A.** ராஜு
செட்டியார் அவர்கள்
தலைமையில் பாராட்டு விழா



மூதறிஞர் ராஜாஜி அவர்கள் திரு K. சந்தானம் அவர்கள் தலைமையில்
அருணகிரிநாதர் விழாவைத் துவக்கி வைத்துப் பேசுகிறார்.



திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், M.A.B.L., M.O.L.
(1959) பொற்பதக்கம் பெற்றுப் பாராட்டுக்கு ஏற்புரை
வழங்குகிறார்.



Dr K S கிருஷ்ணன் அவர்கள் பத்மபூஷண்
திரு T. S. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில்
காந்தி விழாவைத் துவக்கி வைத்துப் பேசுகிறார்.

திரு D. ராமசாமி அய்யங்கார், BA.BL. அவர்களுக்கு
சஷ்டியப்தபூர்த்தி நடைபெற்றதைப் பாராட்டுதல்; ஸ்ரீரங்கம் பெரிய ஆஸ்ரமம் ஆண்டவன் ஸ்வாமிகள்,
உடன் அமர்ந்துள்ளார்கள்

## உபதலைவர்கள்



தர்மபிரவர்த்தன
திரு C. B. முத்துசாமி செட்டியார்



சிவநேசச்செல்வர்
திரு K. S. வீரண்ண செட்டியார்



திரு N. பார்த்தசாரதி, B.A.B.L.
அட்வகேட்

## நன்னெறிக்கழகம் கோயமுத்தூர் (Regd.)

நிர்வாக சபையினர் 1983—84



பின்னணி : திரு K. V. கிருஷ்ணராஜ், B.E, திரு K. சிவசாமி செட்டியார், ஜனுப் T. M. அப்துல்ஜப்பார், B.A.B.L.,
திரு அர்விந்த் ஷாந்திலால், B.E., திரு N. ஜானகிராமன்

முன்னணி : திரு V. V. ஸ்ரீராமன், திரு. P. ராமசாமி, B.A.B.L., திரு தா. பாபுராஜு,
Dr. J. துல்ஜாராம்ராவ், M.SC., PH.D., திரு N. பார்த்தசாரதி, B.A.B.L., திரு R. இருசுப்பிள்ளை, M.A.,
Dr. M. R. P. குருசாமி, M.A., PH.D.,




# நன்னெறி

மேதகு நடுவர் செங்கோட்டுவேலன்

தமிழ் மொழியில் 'நெறி' என்ற சொல் சமயத்தையும், ஒழுக்கத்தையும் குறிக்கும். ஒழுக்கமுடையவர் சமயத்திற்கு உரியவர்கள் என்பது தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. வடநூலார் ஒழுக்கத்தைத் தர்மம் என்றும், சமயத்தைத் தர்சனம் என்றும் வேறுபடப் பகர்வர்.

நெறி என்ற பெயரைத் தாங்கிப் பல இலக்கியங்கள் தமிழ் நாட்டில் தோன்றின. நீதி நெறி விளக்கம் என்ற நூல் குமரகுருபர சுவாமிகளாலும், நன்னெறி என்ற நூல் சிவப்பிரகாசராலும் ஆக்கப்பட்டன. நன்னெறி என்னும் ஒழுக்கத்தையும், இறைத் தன்மையையும் ஒருங்கிணைத்து

''மின்அறி சடாமுடி விநாயகன்
அடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும்
வருமே''

என்று கூறிப் போந்தார் சிவப்பிரகாசர்.

''நெறி'' என்ற சொல்லின் தோற்றமும் ஆராயத் தக்கது. ஆதியில் காட்டை வெட்டிப் போட்டுக் கடிய நிலத்தைத் திருத்த முற்பட்டான் மனிதன். காட்டிற்குள் செல்ல முதலில் ஒரு வழியை ஏற்படுத்த வேண்டும். முயன்று காட்டிற்குள் செல்ல ஆக்கப்பட்ட வழி 'நெறி' ஆயிற்று. செப்பனிடப்பட்ட வழி நல்ல நெறி. ஆனால், அவ்வழியினின்றும் சிறிது பிறழ்ந்தாலும் முட்கள் தைக்கும். அதுவே போன்று இவ்வுலகில் நனிசிறக்க வாழ்ந்தவர்கள் எவ்வாறு வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்று காட்டிய வழியும் நெறியாயிற்று. அந் நெறியைப் பின்பற்றினால் வாழ்க்கையில் துன்பங்களாகிய முட்கள் தைக்கா.

''நெறியைப் படைத்தான் நெருஞ்சில்
படைத்தான்
நெறியின் வழுவின் நெருஞ்சில்முட் பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாய கிலாவே''

என்றது திருமந்திரம். நெறியையும், நெருஞ்சிலையும் ஆண்டவன் படைத்து உய்யும் வகையில் முயலும் உயிர்களை நெறிப்படுத்தி, இடர் களைந்து உய்விக்கிறான் என்பது திருமூலர் கருத்து.

நெறியில் நிற்றல் ஒன்றே மக்களை உய்விக்கும் என்று பௌத்தம், ஜைனம் என்ற இரு பெரும் சமயங்கள் எடுத்தியம்பின. நெறி நிற்றலில் தமிழ் மக்களுக்கு இருந்த பெருநம்பிக்கையால் அவ்விரு சமயங்களும் தமிழ்நாட்டில் தழைத்தோங்கின. சங்கம் மருவிய இலக்கியங்களுள் நீதி இலக்கியமாகத் திகழும் பதினெண் கீழ்க்கணக்கில் இடம் பெற்ற நூல்கள் பெரும்பாலும் சமணர்களால் செய்யப்பட்டவை.

அறநூல்களிலிருந்து ஆராய்ந்தறிந்து, அதன்படி நிற்றலே உய்யும் வகை என்ற கருத்து ''நூலொடு பட்ட நுனிப்பியல் வழாமைக் காலவகையிற் கருமம் பெரிதெனல் நெறியிற் திரியா நீர்மையிற் காட்டி'' என்று வரும் பெருங்கதை வரிகளில் கொங்குவேளிர் எடுத்துக்காட்டியுள்ளார்.

''நால்வேத நெறிதிரியினும்'' கோமான் பெருஞ்சோற்றுதியன் நெடுஞ்சேரலாதன் நெறி திரிய மாட்டான் என்று போற்றுவார், புறநானூற்றுப் புலவரான முரஞ்சியூர் முடிநாகராயர்.

நாளடைவில் ஒரு வழியின் சிறப்புச் சென்றடைகின்ற இடத்தைப் பொறுத்தே அமைவதை மக்கள் உணரத் தலைப்பட்டனர்.

காட்டின் நடுவே அமைந்த நீர் ஊற்றுக்கு வழிகள் பல தாமாகவே அமைகின்றன. விலங்குகள் எல்லாம் அவ்வழியே சென்று தாகத்தைத் தணித்துக்கொள்கின்றன. ''உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்'' என்றது புறநானூறு. அதுவே போன்று இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தரத் தக்க நெறிகள் காலப் போக்கில் பல எழுந்தன. இந்நெறிகள் மனிதப்பிறவியின் இன்னல்களைத் தீர்த்தன. இன்னல் களைந்தவுடன் இறைத் தன்மை உயிர் பெற்று விடுகின்றது. ''சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்'' என்றார் மாணிக்க வாசகர்.

எனவே, இறைத் தன்மையை அடையும் நெறி - அதாவது சிவம் ஆகின்ற நெறி நல்ல நெறியாயிற்று. இத்தகை நல்ல நெறிகள் அனந்தம்.

''அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனஅடி
அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலா
இறையவர்
அவரவர் விதிவழி அடையநின்
றனரே''

என்பது திருவாய்மொழி. அவரவர்கள் தங்கள் நிலைக் கேற்ப ஆண்டவனை அடைய வகுத்துக் கொள்ளும் வழிகள் எல்லாம் நல்லவையே என்பது ஆழ்வார் கருத்து.

''ஒன்றதே பேரூர் வழிஆறு அதற்குஉள
என்றதே போலும் இருமுச் சமயங்கள்''

உலகத் தோற்ற முதற் கொண்டு ஆண்டவனை உணர்ந்து உய்யும் வகை ''நன்னெறி'' என்று எல்லாச் சமயாசாரியர் களாலும் போற்றப்பட்டது.

ஒரு முச்சந்தியில் மூன்று கைகாட்டிகள் இருக்கின்றன. எந்த வழியில் போனால் எந்த ஊரை அடையலாம் என்று கைகாட்டிகள் காட்டுகின்றன. அதுவே போன்று ஆறுவகைச் சமய நோக்கில் இறைவனை அடையவும், பௌத்த ஜைன சமய நோக்கில் உயிர்கள் மேம்படவும் பல பெரியவர்கள் நெறி காட்டிப் போயுள்ளனர். நல்ல நிலையை அடைந்த பெரியவர்கள் காட்டிய வழி பயன் தரத்தக்க தாகும். சான்றோர் வாழ்ந்து காட்டிய நல்ல நெறியில் நாம் சென்றால், வாழ்க்கையில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் பேறுகளையும் எளிதில் அடைய லாம். அது ''நீதி வழுவா நெறிமுறை'' ஆகும்.

உயிர்களைப் படைத்த ஆண்டவன் அவைகள் உய்யும் நெறிகளையும் உயிர்கள் மாட்டுக் கொண்ட பெருங்கருணையால் காட்டு கின்றான் என்பது பெரியவர்கள் கண்டறிந்த உண்மை.

''நெறிவாசல் தானேயாய் நின்றானை''
என்றார் பொய்கையாழ்வார்.

''நெறியே நின்மலனே நெடுமாலயன்
போற்றி செய்யும்
குறியே நீர்மையனே கொடியேரிடை
யான்தலைவா
மறிசேர் அங்கையனே மழபாடியுள்
மாணிக்கமே
அறிவே நின்னையல்லால் இனி யாரை
நினைக்கேனே''

மழபாடியுள் உறையும் வைரத்தூண் உயிர் களுக்கு நன்னெறியாய் நிற்பவன் என்பது சுந்தரர் செந்தமிழ் வாக்கு.

''நெறியில் வருபேரா வகை நினையா
நினைவு'' என்றும்,
''வானை ஏறும் நெறி'' என்றும்,

நன்னெறியாகிய இறைநெறியைச் சுட்டுவார் திருஞானசம்பந்தர்.

இறைவனை அடையும் நெறியாகக் கிடக்க விழைகிறார் குலசேகரப் பெருமான்.

''வெறியார்தன் சோலைத் திருவேங்
கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே
னாவேனே''

என்பது அவர் திருவாக்கு.

திருநெறியாவது சிவனையடையும் நெறி என்பது திருமூலர் கருத்து.

''திருநெறி யாவது சித்து அசித்தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மா-நெறி கூடும்
ஒருநெறி ஒன்றுக வேதாந்தம் ஓதுமே''.

அறிவானது ஐந்து புலன்களினாலே கட்டப்பட்டு அந்தரத்தில் தொங்குகிறது. கட்டுப்பட்ட நிலையால் உயிர்கள் செல்லும் வழி அறியா. ஆழ நீரில் மெல்ல இறக்கும் உற்றாரைப்போல் சிவமாகிய கடவுள் இந்த ஆன்மாவை மெள்ள இறக்கி நன்மை பெறச் செய்பவன் குரு என்பதைத் திருமந்திரம் சொல்லும்.

''அறிவைம் புலனுடனே நான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போலக்
குறியறி விப்பான் குருபர னாமே''
—திருமந்திரம்

''தீதில் நன்னெறி நிற்கஅல் லாதுசெய்
நீதியாரொடும் கூடுவ தில்லையான்''

என்பது குலசேகராழ்வார் வாக்கு. ஆண்டவனை அடையும் தீதில்லாத நன்னெறியில் நிற்காதவர்கள் வெறுக்கப்படுவார்கள்.

தன்னையடையும் நெறியை வகுத்த இறைவனை, நெறிகாட்டி நீங்கிவிடாமல் உடன் இருந்து அருள வேண்டும் என்னும் கருத்துப்பட அமைந்தது அதர்வண வேதத்தின் சாரமாகிய நம்மாழ்வார் பெரிய திருவந்தாதி.

''நெறிகாட்டி நீக்குதியோ, நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ, மேனாள் — அறியோமை
என்செய்வா னெண்ணினாய் கண்ணனே, ஈதுரையாய்
என்செய்தா லென்படோம் யாம்.''

நளன் தமயந்தியை விட்டு நீங்குமுன் தன் தகப்பன் நாட்டிற்குச் செல்லும் வழியைக் காட்டிப் பின் நீங்கியதைப்போல் தன்னையடையும் வழியைக் காட்டி நீங்கிவிடாதே என்று ஆண்டவனை வேண்டுகிறார் நம்மாழ்வார்.

மாணிக்கவாசகர் மெய்ஞ்ஞானம் பெற்றவர். அவருடைய திருவடிகள் நன்னெறியில் செல்லுமேயன்றித் தீநெறியில் செல்லாதன. இராமபிரான், பிராட்டியின்பால் செல்லும் மனத்தை ''ஏகும் நல் வழி அவ் வழி என் மனம் ஆகுமோ'' என்றார். இராமபிரான் மனம் போன்றதே மாணிக்கவாசகர் திருவடியும். அத்தகைய பெரியார் ஒருமுறை தம்முடைய பூர்வ நிலையைத் தெரிவிக்கிறார். தாம் உய்யும் நெறி அறியாமல் இருந்ததாகவும் அப்போது பெருமான் தமக்கு உய்யும் நெறி காட்டியதாகவும் அடக்கமாகத் தம்மைக் குறிப்பிடுகிறார்.

''முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து'' என்றும்,

''நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனை
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்''

என்றும் பெருமான் அருளினான் என்று குறிப்பிடுகிறார்.

இதே கருத்துப்பட நம்மாழ்வார்

''அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத் தாரறிய
நெறியெல்லா மெடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி''

என்று ஆண்டவனைக் காணுகிறார்.

மாணிக்கவாசகருடைய திருவாசகத்தையும், நம்மாழ்வார் திருவாய்மொழியையும் அகக்கண் கொண்டு நோக்கினால் புனித ஆன்மாக்களுக்கு இறைவன் உள் நின்று ஞானத்தை உணர்த்துவான் என்ற சைவ சித்தாந்தக் கருத்துப் புலனாகின்றது.

திருவாசகத்தையும், திருவாய்மொழியையும் நன்கு உணர்ந்த குமரகுருபரர்.

''ஒரு மலத்தார்க்கு உள் நின்று அருளி''

என்று கந்தர் கலிவெண்பாவில் குறித்து உள்ளார்.

முடிவும், பன்மையும், அற்புதமும் பெற்றிருக்கின்ற திருமால் அவனுடைய திருவடிகளை அனைவரும் அடைந்து உயரவேண்டுமென்று கருதி நல்வழி காட்டியதைக் குலசேகர ஆழ்வார்,

''பத்தி இலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி''

என்று குறித்துள்ளார்.

தம் குரு காட்டிய நெறியே நன்னெறி என்றிருந்த மதுரகவியாழ்வார் உள்ளக் கிடக்கையை, வேதாந்த தேசிகர்

''துன்பற்ற மதுரகவி தோன்றக்
காட்டும்
தொன்னெறியே நன்னெறியாம்
துணிவார்கட்கே''

என்று பாராட்டியுள்ளார்.

இறைவன் தன்மை, ஆத்மாவின் தன்மை, இறைவனையடைய ஆன்றோர்களால் வகுக்கப் பட்ட வழி, வழியிலே ஏற்படுகின்ற தடை, தடையை நீக்கி இறைவனை அடைதல் ஆகிய ஐந்து பொருளையும் சொல்வது திருவாய்மொழி என்றது தனியன்.

''மிக்க இறைநிலையும் மெய்யாம்
உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித் —
தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்
குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்''

தக்கநெறியைக் காட்டுவது தமிழ்வேதமாகிய திருவாய்மொழி.

இயேசுவின் நாமம் ஓதலே நல்லநெறி என்று ரக்ஷணிய யாத்திரிகம் பகர்கிறது.

''நன்னெறி காட்டிடும் நவைகள்
நீக்கிடும்
இன்னெறி யாகிடும் இயேசு நாமமே''

இத்தகைய நல் நெறிப்படுவார் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரை சேருவார்.

பெரியவர்கள் காட்டிய தீதில் நன்னெறியில் நடக்க ஒட்டாமல் தடுக்கும் ஆணவம், அகங்காரம், இச்சை ஆகிய மலங்களால் வரும் தடையை நீக்கியருள ஞானமா நடராசப் பெருமானைப் பிரார்த்திக்கின்றார் இராமலிங்க வள்ளலார்.

''ஞானமணிப் பொதுநடஞ்செய்
திருவடி கண்டிடவே
நடக்கின்றே னந்தோமுன் னடந்த வழி
யறியேன்
ஊனமிகு ஆணவமாம் பாவி எதிர்ப்
படுமோ
உடைமை எல்லாம் பறித்திடுமோ நடை
மெலிந்து போமோ
ஈனமுறும் அகங்காரப் புலி குறுக்கே
வருமோ
இச்சையெனும் இராக்கதப்பேய்
எனைப்பிடித்துக் கொளுமோ
ஆனமலத் தடை நீக்க அருள்துணை
தானுறுமோ ஐயா
திருவுளமெதுவோ யாதுமறிந் திலனே'',

இத்தகைய நல் நெறிப்படுவார் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரை சேருவார்.

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்
தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி''

இக்குறட்பாவுக்கு உரை சொல்லவந்த பரிமேலழகர் ''இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேச மொழிகளை அனுபவமுடைய தேசிகர்பால் கேட்டு அதனால் மெய்ப்பொருளை உணர்ந்தவர் மீண்டும் இப்பிறப்பின்கண் வாராத நெறியைப் பெறுவர்'' என்று குறித்துள்ளார்.

உபதேச மொழிகளை அனுபவமுடைய தமிழில் முறைபோகிய அறிஞர்கள் மூலம் மக்களுக்குப் பரப்பும் செயல் நனி சிறந்த செயல். இச்செயலை சென்ற இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகச் செவ்வனே செய்து வரும் கோவை நன்னெறிக் கழகம் போற்றுதலுக்குரியது.

இந்த நற்பணி என்றும் தொடர்ந்து நிலவ எனது பிரார்த்தனை. ★




# கம்பன் கண்ட இராமன்

அமரர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

மங்கியதோர் நிலவினிலே
கனவில்இது கண்டேன்,
வயதுபதி றுறுஇருக்கும்
இளவயது மங்கை
பொங்கிவரும் பெருநிலவு
போற்ற வருந் தோற்றம்
துங்கமணி மின்போலும்
வடிவத்தாள் வந்து
'தூங்காதே எழுந்துஎன்னைப்
பார்' என்று சொன்னுள்.
அங்குஅதனில் கண்விழித்தேன்
அடடாவோ ! அடடா !

என்று தன் அழகுத் தெய்வ தரிசனையைக் கூறுகிருன் பாரதி. அழகுத் தெய்வம் அவனுக்குப் பதினுறு வயது நிரம்பிய இளவயது மங்கையாகக் காட்சி கொடுத்திருக்கிறது. உண்மையிலேயே அழகுத் தெய்வம் பெண்மை உருவினதுதானு? ஆண்மையில் அழகே இல்லையா? இல்லை, ஆண்மையின் அழகைப் பெண்மையின் அழகு வென்று விடுகிறது என்று அர்த்தமா? பெண்ணே அழகுடையவள் என்று சொன்ன பெருமக்கள், கவிஞர்கள், கலைஞர்கள் எல்லாரும் ஆண் மக்களே அல்லவா? பறவை இனத்தை எடுத்துக்கொண்டால், சேவல், கோழியை விட அழகுடையதாக இருக்கிறது, ஆண்மயில் பெண்மயிலைவிட அழகு வாய்ந்தது என்பதை மறுப்பவர் இல்லை. அதுபோலவே, மிருக உலகிலும், பசுவைவிடக் காளையும், பெண் சிங்கத்தை விட ஆண் சிங்கமும் அழகு உடையனவாய் இருக்க, இந்த மக்கள் இனத்திலே மட்டும், பெண் எப்படி ஆணை விட அழகாய் இருந்துவிட முடியும்? இது நியாயமான கேள்வி. ஆடவர் தங்கள் பல வீனத்தை மறைக்கவே இப்படிப் பெண்ணின் அழகை மிகைப்படுத்திக் கூறி யிருக்கிருர்கள். இந்த ஆண்களில் ஒரு சிலராவது நெஞ்சில் உரம் உள்ளவர்களாக இருந்திருக்கிருர்கள். 'பெண்ணின் அழகெல்லாம் எண்ணிப் பிரித்திடில் பீழை சதை என்றே கண்டிடுவோம். வண்ண மலரிடை வாய்ந்த வனப்பு எல்லாம் வாடி வதங்குதல் யாமறிவோம்' என்று ஓர் இளங்கவிஞர் துணிந்து கூறி, ஆண்களின் மானத்தையே காத்திருக்கிருர்.

இன்னும் அழகு ஆராய்ச்சியில் பலர் செய்கிற தவறு ஒன்று. 'ராஜா மகள் ரோஜா மலர் நிறம்' என்பர்; சிவந்த நிறம் உடையவர்களே அழகு உள்ளவர்கள், கறுப்பு நிறம் என்ருல் அழகே இல்லாதவர்கள் என்பதுதான் பொதுஜன அபிப்பிராயம். இதிலேகூட அழகை ஆராதனை பண்ணுகிறவர்கள் தவறுதான் செய்கிருர்கள். மஞ்சள் கலந்த சிவப்புக் கொஞ்சம் கவர்ச்சி உடையதே. அதற்காகச் செம்மேனி எம்மானையோ வெள்ளை வெளேரென்ற வெள்ளை நிறத்தவரையோ அழகு உடையவர்கள் என்று சொல்லிவிடுதல் முற்றிலும் தவறு. குளிர்ச்சியில் ஒரு ருசி என்று கண்டவனே, கறுப்பில் ஒரு அழகு என்றும் சொல்லி மகிழ்ந்திருக்கிருன். நாம் வணங்கும் தேவர்கள் உலகிலே பச்சைப் பசுங்கொடி அந்தக் கறுப்பில் அழகி உமை, சிவந்த லட்சுமியின் அழகுக்கோ அல்லது வெள்ளை நிறத்துக் கலைமகள் அழகிற்கோ கொஞ்சமும் குறைந்தவள் அல்லவே! விஷ்ணுவின் நீலமேக சியாமள நிறத்தைப்பற்றியோ சொல்லவே வேண்டாம். ஆணழகன் அருச்சுனனும், காதற் கடவுள் காமனும் நல்ல கறுத்த நிறத்தினரே. இவர்கள் எல்லாம் அழகிற்கே அதிதேவதைகள் ஆயிற்றே!

அப்படியிருக்க, கறுப்பைவிடச் சிவப்பு அழகு என்று கலா ரசிகர்கள் சொன்னால் அவர்களது ரசிகத் தன்மையை என்ன என்று சொல்வது?

இந்தப் பிரச்னைகளுக்கு எல்லாம் ஒரு முடிந்த முடிவை நிலைநிற்கச் செய்கிறன் காவிய நாயகனை இராமன். வான்மீகர், இராமனது அழகில் எப்படி ஈடுபட்டாரோ? மூலத்தைப் படித்துப் பார்க்கும் வாய்ப்பு இல்லாததினால் கூறுவதற்கில்லை. ஆனால், இந்தக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் இருக்கிறானே, அவன் ராம சௌந்தர்யத்தில் அப்படியே ஈடுபட்டு மெய்மறக்கிறன். 'அல்லையாண்டு அமைந்த மேனி அழகன்' என்று அந்த அழகனை நிறைந்த பெருமையோடே குறிப்பிடுகிறன். அதிலும் அவனது கரிய நிறத்தையே பாராட்டி நல்ல இருட்டைப் போலக் கரிய நிறத்தவன் என்றே கூறுகிறன். இந்த இருங்கடகக் கரதலத்து எழுதரிய திருமேனிக் கருங்கடலை' மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதை கன்னிமாடத் திருந்து கண்டு காதல்கொள்கிறள் என்பது கம்பன் சொல்லும் கதை. இந்த அழகனது அழகைத்தான் சீதை எப்படி அனுபவித்திருக்கிறள்! அதைக் கவிஞன்தானே சொல்ல வேண்டும். சொல்கிறன், அழகு ஒழுகும் தமிழ்ப் பாட்டிலே.

இந்திர நீலம் ஒத்து
இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும்
தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணிவரைத்
தோளுமே, அல ;
முந்திஎன் உயிரைஅம்
முறுவல் உண்டதே

என்பதுதானே சீதையின் கூற்றுகக் கம்பன் சொல்வது? காதலுற்ற கன்னி சீதை கண்வழி நுழைந்த கள்வனும் இராமனது அழகில் ஈடுபட்டு நின்றது வியப்பில்லை. பின்னர் இராமன் மிதிலை நகரிலே உலா வந்தபோது, வீதிவீதியாய் வீடுகளில் உள்ள பெண்கள் எல்லாம் தலைவாயிலுக்கு ஓடி வந்து இராமனைக் காணுகிறர்கள். இராமனது அழகு அவர்களை எப்படி வசீகரிக்கிறது! ஆம், சிலர் அவன் தோளைப் பார்த்தார்கள் ; சிலர் தாளைப் பார்த்தார்கள் ; தோளைப் பார்த்தவர்கள் தோளில் பதிந்த பார்வையை வேறு பக்கம் திருப்பமுடியாது தவித்தார்கள். தாளைப் பார்த்தவர்களும், தடக்கையைப் பார்த்தவர்களும் அப்படி அப்படியே. இப்படியே ஒருவராலும் அவனது வடிவம்முழுவதையும் கண்டுகளிக்க முடியாதே போய்விடுகிறது. ஒவ்வொரு அங்கமுமே அத்தனை வசீகரம் என்றால், முழுவடிவினையும் எப்படி என்று சொல்ல ?

தோள்கண்டார் தோளே கண்டார் ;
தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்;
தடக்கைகண் டாரும் அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத்து அன்னான்
உருவுகண் டாரை ஒத்தார்

என்பது பிரபலமான பாட்டாயிற்றே, அடடே ; அந்தச் சௌந்தர்ய ஈடுபாட்டை வைத்துக்கொணடு சமயவாதிகள் ஒவ்வொருவரும் இறைவனது திரு உருவில், ஒவ்வொரு அம்சத்தையே காண்கிறர்கள் என்ற அற்புத உண்மையைக்கூட அல்லவா கவிச் சக்கரவர்த்தி எளிதாக விளக்கிவிடுகிறன் !

சீதையும் இராமனும் காதலித்துக்களிக்கும் வாழ்வில்தான் எத்தனை அழகு? அவர்களது வாழ்க்கைக்கு மிதிலா நகரமோ, அல்லது அயோத்திப் பட்டணமோ, இல்லை அங்குள்ள அரச மாளிகைகள்தான் வேண்டும் என்றில்லை. கங்கையிலே, தோணியிலே ஏறிச் சென்றாலும் சரி, தண்டகாரணியத்திலே கோதாவரிக் கரையானாலும் சரி, அழகனும் அழகியும் குதுகலமாகவே இருக்கிறர்கள். படகில் செல்லும் போதோ

பால் உடை மொழியாளும்
பகலவன் அனையானும்
சேல் உடை நெடுநன்னீர்
சிந்தினர் விளையாடி

என்பதுதான் காட்சி. இன்னும் கோதாவரிக் கரையிலே ஓதிமம் ஒதுங்கக் கண்டால், பக்கத்தில் உள்ள சீதையின் நடையோடு,

அன்னத்தின் நடையை ஒப்பிட்டு, அன்ன நடை சீதையின் நடைக்குத் தோற்கிறதே என்று சிறுநகை செய்கிறுன் இராமனும். சீதையோ அங்கு வந்து நீருண்டுமீளும் யானைக் குட்டி நடப்பதைத் தன் கணவன் நடையோடு ஒப்பிட்டு, யானையின் நடையையும் விஞ்சுகின்றதே தன் காதலன் நடை என்று பெருமிதம் அடைந்து, புதியதோர் முறுவலே பூக்கிருள். இப்படியே இன்னும் எத்தனையோ காட்சிகள் காவியம் முழுவதும்.

பெற்ற தந்தையாம் தயரதனே, அன்னையரோ, இல்லை வில்வித்தை பயிற்றிய விசுவாமித்திரனே இராமனது அழகில் ஈடுபட்டு நிற்பது வியப்பில்லை கிஷ்கிந்தையை அடுத்த மலையிலே ஒளிந்திருந்த வானர வீரன் சுக்ரீவன்கூட, அந்தக் குண்டலம் துறந்த கோலத்திலும் குளிர்ந்த கண்களின் அழகிலும் ஈடுபட்டு நிற்கிருனே! அடடே, புயல் தழுவிய மரகத மலைபோல் அந்தத் தோள்களின் பேரிலே மதிதவழும் முகமாகிய புண்டரீகங்கள் அல்லவா பூத்துக் குலுங்குகின்றன என்றே அதிசயிக்கிருன் அவன். இராமனது சௌந்தர்யத்திலே குகன் ஈடுபடுகிருன், அனுமன் ஈடுபடுகிருன், விபீஷணன் ஈடுபடுகிருன் - என்றெல்லாம் எத்தனையோ சான்றுகள் எல்லாவற்றையும்விட, அந்தக் காமவல்லியாம் கள்ளி சூர்ப்பணகை ஈடுபடுகிருளே அதை என்ன என்று சொல்ல? பஞ்சவடியிலே பன்னக சாலையிலே இருக்கின்ற இராமனைக் காண்கின்ற சூர்ப்பணகை, 'இவன் என்ன மன்மதனு, ஆம், அன்று கற்றைவார் சடையவன் கண்ணில் எழுந்த தீயினுல் வெந்த அநங்கன், எத்தனையோ வருஷ காலம் தவம் செய்து இந்த நல்ல உருவைப் பெற்றிருக்க வேண்டும்' என்பதே அவளது தீர்மானம்.

அவனது மணிக் கரம், வீரத் தோள் எல்லாம் கிடக்கட்டும் அவனது அகன்ற மார்பு இருக்கிறதே அதை ஒரு பக்கத்தில் இருந்து மற்ருெரு பக்கம் பார்க்கக் கண்களுக்கு நீளம் போதாது போல் இருக்கிறதே என்று வேறே ஐயுறுகிருள். கடைசியில் அந்த அழகன் வாள்முகம் பொதிஅவிழ் தாமரைப் பூவை ஒத்ததா? இல்லை மதியை ஒத்ததா என்றெல்லாம் தீர்மானிக்க முடியாமல் தத்தளிக்கிருள். இத்தனை அழகை இவன் பெறத் தவமே தவம் செய்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருகிருள். இம்மட்டோ? பின்னர்ச்சீதையையும்இராமனையும்சேர்த்துப் பார்த்தபின் இருதிறத்தார்க்கும் செய்த வரம்பு இவ்விருவர் என்றே அவர்களது அழகை அனுபவிக்கிருள். இப்படி எல்லாம் இராமனது அழகை அனுபவித்த சூர்ப்பணகை இலங்கைக்கே ஓடி இராவணனிடம் தன் மூக்கு அறுபட்ட கதையைச் சொல்கிருள். சீதையின் அழகை வர்ணிப்பதற்கு முன்பே, யாவர்க்கும் எழுத ஒண்ணுத இராமனை வர்ணிக்கிருள். கடைசியில் விரகதாபத்தால் வெந்து கொண்டிருக்கும் இராவணன், தன் உரு வெளித்தோற்றத்தில்கண்ட சீதைதானு அவள் சொன்ன சீதை என்று சூர்ப்பணகையிடம் கேட்க, அவள் இராமனையே அவளது உரு வெளித்தோற்றத்தில் கண்டு, ஆம் அவனே

செந்தாமரைக் கண்ணெடும்,
 செங்கனி வாயினேடும்,
சந்துஆர்தடந் தோளொடும்,
 தாழ்தடக் கைகளோடும்
அம்தார் அகலத் தோடும்
 அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன் ஆகும்
 அவ்வல்வில் இராமன்

என்கிருள். இராமனது அழகை எல்லோரையும் விட, நன்ருக அனுபவித்தவள் (கவிச் சக்கரவர்த்தி கம்பன் சொற்படி) சூர்ப்பணகை என்று சொன்னுல் வியப்பில்லைதான்.

இந்தக் கருநிறக் கமலக் கண்ணன் போர் செய்யப் புறப்பட்டாலும் அதிலுமே ஒரு அழகு 'சரன் படர் புட்டில் கட்டி, சாபமும் தரித்து, தள்ளா உரன்படர் தோளில் மீளாக் கவசம் இட்டு, உடைவாள் ஈர்த்து' அவன் போருக்கு எழும் காட்சியும் அழகாகவே இருக்கிறது. இப்படியே இருந்தால், எழுந்தால், நடந்தால், கிடந்தால் எல்லாம் இராம சௌந்தர்யம் வளர்ந்துகொண்டே போகிறது. இன்னும், வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் எல்லோருமே இராமனது அழகில் ஈடுபட்டு நிற்கிருர்கள். இப்படி ஒரு இராமனை, அந்தமில் அழகனை உருவாக்கிய கம்பன், கடைசியில்

தானும் அதன் அழகில் ஈடுபட்டு மெய்ம்மறக்கிருன். 'ஓவியத்து எழுத ஒண்ணுத உருவத்தான்' என்பான் ஒருதரம். ஆடவரும் பெண்மையை அவாவுவர் அவன் தோள்களை அணைய என்பான் மறுதரம். இதனுல் எல்லாம் திருப்தி அடையாது.

வெய்யோன் ஒளி தன்மேனியின்
விரிசோதியின் மறைய,
பொய்யோஎனும் இடையா ளொடும்
இளையானொடும் போனுன்
மையோ!மர கதமோ!

மறிகடலோ மழை முகிலோ
ஐயோ!இவன் வடிவு என்பதுஓர்
அழியாஅழ குடையான்

என்றே முடிப்பான். ஆம். அவன் அழியா அழகினை அழியாக் காவியத்திலேயே நிலை நிறுத்திவிடுகிருன் கம்பன். கம்பன் கண்ட இராமனிடத்துச் சிறப்பாயிருப்பது அவனது அழகே. அந்த அழகை ஆராதனை பண்ணிப் பண்ணியே காவியம் வளர்கிறது, விரிகிறது, உயர்கிறது என்று சொன்னுல் அது மிகையே அன்று. ★

## மனப் பண்பும் அழகும்

கம்பர், மக்களது உடல்வனப்பை எப்படியெல்லாமோ பார்த்து அனுபவித்திருக்கிருர். கும்பகர்ணன் முதலானவர்களுடைய பருத்து உயர்ந்த கருமேனியைக் கண்டு களிக்கிறவர் அவர். தாடகையை வருணிக்கும் போது அவளுடைய கோர சொருபத்தை அனுபவித்த மாதிரி அரம்பை முதலியோர் உருவத்தைத்தான் அவர் அனுபவிப்பாரா? உண்மையான காவியக் கண்ணுக்கு, சக்தி வாய்ந்ததெல்லாம் அழகுடையனவாகவே தோன்றும்.

இனி, சக்தியோடு உயர்ந்த மனப் பண்பும் சேர்ந்துவிட்டால், அந்த உடலுக்கு உண்டாகின்ற அழகு ரொம்பவும் மாற்று உயர்ந்ததாய்ப் போய்விடுகிறது.

இராமர், லட்சுமணர் இருவரும் உயர்ந்த உடற்பண்பும், உள்ளப்பண்பும் வாய்ந்தவர்கள். பொதுவாக உலகத்தில் இந்த இரண்டு பண்புகளும் ஒத்தபடி வாய்ந்தவர்கள் குறைவு. எக்காலத்திலும் குறைவுதான். கம்பர் இதையெல்லாம் நன்ருய்க் கண்டு களித்தவர். தம்முடைய லட்சியத்தை இது சம்பந்தமாக வெளியிடுவதற்கு, இராம லட்சுமணரை ஒரு மலையின் சிகரத்தில் நிறுத்துகிருர். அவர்களுடைய உயர்ந்த குணங்களையெல்லாம் அனுமார் வாயிலாகச் செவியாரக் கேட்ட சுக்கிரீவன் அவர்களைப் பார்க்க வருகிருன்...... தேவர்களுக்கும் மேலான தேவர்தாமே மனுஷராக அவதரித்திருக்கிருர்கள் என்று நிச்சயிக்கிருன்.

— ரசிகமணி டி. கே. சி.

(கம்பர் யார்? — பக் 43-44)



# சிந்தைக் கலசம்

அமரர் மேதகு எஸ். மகராஜன்

வானவெளிக் கப்பலில் முதன்முதலாகப் பயணம் செய்துவிட்டுப் பூமிக்குத் திரும்பி வந்தார் ஒரு ரஷ்ய விஞ்ஞானி. பேட்டி காணச் சென்ற பத்திரிகை நிருபர்களிடத்திலே அவர் எக்காளமாகச் சொன்னார்: ''வானத்திலே எங்கெங்கெல்லாமோ சுற்றிப் பார்த்து விட்டேன். ஆனால், கடவுள் என்ற ஆசாமி எங்கும் என் கண்ணுக்குத் தென்படவில்லை'' என்றார்.

உள்ளத்துக்குள்ளேயே இறைவனை வைத்துக்கொண்டு, அகவெளியை மறந்து புறவெளியிலே இறைவனைத் தேடுகிறார்களே, அவர்களைப் பார்த்துத் திருமூலர் சொல்லுகிறார் :

''உள்ளத்தி னுள்ளே உளபல
தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்து நின்றாடார்,
வினைகெட,
பள்ளமும் மேடும் பறந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியில் லோரே.''

ஒரு விஞ்ஞான மேதையைப் பார்த்து, அதுவும் வானவெளியைச் சுற்றி வந்த விஞ்ஞான மேதையைப் பார்த்து, ''கள்ள மனமுடைய கல்வியில்லாதவன்'' என்று தயவு தாஷண்யம் பாராமல் பேசுகிறார் திருமூலர்.

திருமூலரைக் காட்டிலும் கடுமையானவர் சிவவாக்கியர். அசட்டுப் பேச்சைக் காதால் கேட்கவே முடியாது அவராலே. அந்த விஞ்ஞானியைப் பார்த்து சிவவாக்கியர் சொல்லுவதைப் பார்ப்போம்.

''உறியிலே தயிர் இருக்க
ஊர்புகுந்து வெண்ணெய் தேடும்
அறிவிலாத மாந்த ரோடு
அணுகு மாற தெங்ஙனே!''

''வீட்டுக்குள்ளே இருக்கிறது உறி. உறிக்குள்ளே இருக்கிறது தயிர். அந்தத் தயிரை எடுத்துக் கடையவேண்டியதுதான் பாக்கி; உடனே வெண்ணெய் கிடைத்துவிடும். இதைச் செய்யாமல், வெண்ணெய் தேடி ஊர் ஊராய் அலைகிறாயே, வான வெளியை வேறு சுற்றுகிறாயே, உன்னுடைய சமர்த்தை என்னவென்று சொல்லுவது! உன்னோடு பேச்சு வைத்துக்கொள்வதே தப்பு'', என்று கடிந்து கொள்ளுகிறார் சிவவாக்கியர்.

அப்படியானால், இறைவன் உள்ளத்துக்குள்ளேயே இருக்கிறானா? போயும், போயும் இருப்பதற்கு மனித உள்ளந்தானா கிடைத்தது இறைவனுக்கு? அங்கே போய் அமர்வதற்கு என்ன காரணம் - என்றெல்லாம் கேட்கிறோம். பதில் சொல்லுகிறார் திருமூலர்:

''கள்ளப் பெருமக்கள்
காண்பர் கொலோ என்று
உள்ளத்தி னுள்ளே
ஒளித்திருந்து ஆளுமே''

வேடிக்கைப் பிரியனாகிய இறைவன், மனிதனோடு கண்ணும் பொத்தி விளையாடுகிறான். கண்ணும் பொத்தி விளையாடும் போது எல்லோரும் எதிர்பார்க்கும் இடத்திலே ஒளிந்தால், விளையாட்டில் ரஸமில்லாது போய்விடுமே: ஆகையால், மனிதன் எளிதில் கண்டுபிடிக்க முடியாத இடம் அவன் மனம் தான், அங்கே போய் ஒளிந்துகொள்வோம் என்று தெளிந்து, அவன் உள்ளத்துக்குள்ளே போய்ப் பதுங்கிக்கொண்டானாம்.

"சிந்தைக் கலசத்து எழுகின்ற மாசக்தி" என்று இறைவனைப் போற்றுகிறார் திருமூலர். ஒளிந்திருக்கும் இடம் நம்முடைய சிந்தை தான், வானவெளியல்ல என்று தெரிவதற்கே யுகக் கணக்காகிவிடுகிறது. ஆனால், இருக்கும் இடம் தெரிந்த பிறகு இறைவனோடு உறவாடுவது எளிதாகிவிடுகிறது.

தன் மனத்தைத் தன் மனத்துக் குள்ளேயே செலுத்தித் தேடத் தொடங்கு கிறார் திருமூலர். கலங்கிப் போயிருந்த சிந்தை, கொஞ்சம் கொஞ்சமாகத் தெளி வடைகிறது. சிந்தைக் கலசத்தினுள்ளிருந்து சிவம் மெல்ல மெல்ல வெளிப்படுவதைக் காண்கிறார்.

''சிந்தை தெளியத் தெளிய
வல்லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே''

என்று ஓலமிடுகிறார் திருமூலர்.

இப்படியாக, இறைத் தத்துவத்தைக் கண்டுபிடித்தவுடன் அவருக்கு என்று மில்லாத துணிச்சல் ஏற்பட்டுவிடுகிறது.

''ஆராலும் என்னை அமட்ட
வொண்ணுதினி''

என்றார். ஒரு பயலுக்கும் அஞ்ச வேண்டிய தில்லையாம். ஏன்?

''சீரார் பிரான் வந்து என் சிந்தை
புகுந்தனன்''

முன்னமேயே சிந்தையிலிருந்தவன் தான். ஆனால், இப்போதுதானே என் சிந்தையிலிருக்கிறான் என்று நான் உணர்ந் தேன். ஆகையால், அவன் என் சிந்தையில் புகுந்து விட்டான் என்றே சொல்ல வேண்டும் இதன் விளைவு என்ன?

''சீராடி அங்கே திரிவதல்லால், இனி
ஆர்பாடும் சாரா அறிவறிந் தேனே'.

தன் நிறைவு வந்துவிட்டது. இன் னொருவனைச் சார்ந்து நிற்க வேண்டிய அவசியம் இல்லை. சார்பு கெட்டுவிட்டது. ஆகவே, ஒழிந்தது அச்சம். ஏன் பாட மாட்டார்?

''ஆராலும் என்னை அமட்ட
வொண்ணுதினிச்
சீரார் பிரான்வந்து என் சிந்தை
புகுந்தனன்
சீராடி அங்கே திரிவதல்லால், இனி
ஆர்பாடும் சாரா அறிவறிந் தேனே''.

☆

---

## தமிழ் மந்திரம்

சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேதம்
இதாசனி யாதிருந்தே னின்ற காலம் (திருமந்திரம் 75)

எனவும்,

தமிழ்மண் டலம்ஐந்தும் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிந்தர்
அவிழு மனமும்எம் ஆதி யறிவுந்
தமிழ்மண் டலம் ஐந்தும் தத்துவ மாமே (திருமந்திரம் 1646)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகள், திருமந்திரத்திற் கூறப்படுந் தத்துவ வுண்மைகள் செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த சிவஞானிகளால் அருளிச் செய்யப் பெற்ற சிறப்புடையன வாதலை நன்கு வலியுறுத்து வனவாகும்.

பேரா. க. வெள்ளைவாரணர்

— (பன்னிரு திருமுறை வரலாறு II – பக் 404)



# இன்ப நெறி

அமரர் வி. கே. சி. நடராசன், ஐ. ஏ. எஸ்.

''காதலினுல் மானுடர்க்குக் கலவி
யுண்டாம்
கலவியிலே மானுடர்க்குக் கவலை திரும்
காதலினுல் மானுடர்க்குக் கவிதை
உண்டாம்
கான முண்டாம் சிற்பமுதற் கலைக
ளுண்டாம்
ஆதலினுல் காதல் செய்வீர்! உலகத்திரே
அஃதன்றே இவ்வுலகத் தலைமை
இன்பம்''

என்று பாடினுன் பாரதி. பாரதி சொல்லித் தான் மானுடர் காதல் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதில்லை. ஆதி மனிதனும், பெண்ணும் தோன்றிய காலந் தொட்டு உலகை இயக்கும் சக்தியே காதல் தான். ஆகவே, காதலே இவ்வுலகத் தலைமை இன்பம்-என்று பாரதி சொல்வதில் வியப்பேதுமில்லை - இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தொல்காப்பியனுரே

''இன்பமும் பொருளும் அறனும்
என்முங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை
மருங்கில்
காமக் கூட்டம்''

என்றுதான் பேசுகிருர். வள்ளுவரும் வையகத்தில் நாமெல்லாம் வாழ்வாங்கு வாழ அறம், பொருள் இவற்றுடன் இன்பத்தையும் சேர்த்துப் பாடியதோடுமட்டு மன்றி அந்த இன்பத்தின் சாரத்தை எல்லாம் கனிச்சாருய் வடித்தெடுத்து நமக்கு வழங்குகிருர்.

இன்ப ஒழுக்கமான அன்பொழுக்கம், இல்லறத்துக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதை அறத்துப்பாலிலேயே உணர்த்தி விடுகிருர். காதலனும் காதலியும் வாழ்வில் ஒன்றுபட்டு, உலகில் வாழும் முறையையும், ஆற்ற வேண்டிய கடமையையும், அறத்துப் பாலிலேயே வலியுறுத்துகின்ற அவர், அவர்கள் இடையே உள்ள அன்பு, இருவர் அளவில் நின்று அவர்களை எவ்வாறு இயக்குகின்றது என்பதை இன்பத்துப் பாலிலே தான் சுவைபடக் கூறியிருக்கின்முர். வாத்ஸயாயனர், கொக்கோகர் போலல்லாமல், நக்கிரர் போன்று அந்த இன்பத்தைப் பேய்த்தே ராக்காமல், அன்பின் பயனே இன்பம் என்ற விளக்கம் தந்து, நம்மை இன்ப உலகுக்கே அழைத்துச் செல்கிருர்.

அறத்தையும், பொருளையும் கற்கும் போது உயர்ந்த ஆசாரியபீடத்திலே அமர்ந்து அறவுரையும் அறிவுரையும் வழங்கி, இலட்சிய வாழ்க்கையின் இலக்கணத்தை வகுத்துத் தருகிருர் வள்ளுவர். காமத்துப் பாலைத் தன் கூற்முக அமைக்காது காதலன், காதலி, தோழி ஆகிய மூவரின் பேச்சாகவே அமைக்கிருர். காமத்துப்பாலைப் படிக்கும் நாம் நம் மனத்திரையில் நடமாடும் இந்த மூன்று பாத்திரங்களையும், பகைப்புலமாக அமையும் இயற்கைப் பொருள்களையுமே காண்கிருேம். எனவே, காமத்துப்பாலைக் கற்கும்போது, வள்ளுவர் நம்மில் ஒருவராக, இளைஞுக, நகைச்சுவையும் ரஸானுபவமும் நிறைந்த ரசிகனுக, ஏன் நல்ல கவிஞுகவே தோன்றுகிருர். அறத்துப்பாலிலும், பொருட்பாலிலும் கருத்துச்செறிவும், ஆழ்ந்த நுண் அறிவுப் புலமையும் இருந்தாலும், காமத்துப் பாலிலேதான் அவற்றேடு கவிதைப்பண்பும் ததும்பி நிற்பதை உணருகிருேம். அறத்துப் பாலிலும், பொருட்பாலிலும், எட்டி நின்று வணக்கம் செலுத்தும் நம்மை, காமத்துப்

பாலிலே தன் பக்கம் இழுத்துத் தோளோடு தோள் சேர நின்று தோழமையே கொண்டாடி விடுகிருர். வள்ளுவரோடு நெருக்கமாகப் பழகும் வாய்ப்பு நமக்குக் காமத்துப்பாலிலேதான் கிட்டுகின்றது என்ருல், அது மிகையே அல்ல.

வள்ளுவரது காமத்துப்பால், அறத்தையும், பொருளையும் போல் வெறும் இலக்கணமாக அமையாது. அந்த இலக்கணங்களை உள்ளிடாகக் கொண்ட இலக்கியமாக, கூற்று வகையில் அமைந்த இன்பக் கதைகளின் தொகுப்பாக விளங்குகிறது முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூவகைப் பொருள்களையும் விரிவாகக் கூருது உரிப்பொருளையே சிறப்பாகக் கொண்டு, பல பாத்திரங்களுக்குப் பதில், தலைவன் தலைவி, தோழி ஆகிய மூன்று பாத்திரங்களை மட்டுமே படைத்து, காட்சிகளை நாடக முறையிலே உருவாக்கி அந்தந்தப் பாத்திரங்களே பேசுவதாகக் குறட்பாக்களை அமைத்துக் காட்டியிருக்கும் அழகும், நயமும், கற்பனைத் திறமும், நம்மை வியப்பில் ஆழ்த்திவிடுகின்றன.

ஒரு சில காட்சிகளைப் பார்க்கலாம் :-

உருவும், திருவும், பிறவும் ஒத்த தலைவனும், தலைவியும் சந்திக்கிருர்கள் - முதல் பார்வையிலே இருவர் நெஞ்சமும் ஒன்ருகி விடுகின்றது. பார்வையோடு பார்வை கலந்து உணர்வு ஒன்றியபின், அங்கே வாய்ப் பேச்சுக்கே இடமில்லை.

''கண்ணெடு கண்ணினை
நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில''

உள்ளத்தாலும் உணர்வாலும், அன்பாலும், பண்பாலும் அவர்கள் ஒன்றிவிட்டதை உணர்ந்த தோழி அவர்கள் அடிக்கடி சந்தித்துக் களவு ஒழுக்கத்தில் ஈடுபடத் துணை செய்கிருள். தலைவனும் தலைவியும் அடிக்கடி சந்தித்துச் சந்தித்துப் பிரிகிருர்கள்.

பிரிந்த பின்னர்த் தனியிடத்தே இருந்து தங்கள் சந்திப்பைப்பற்றி நினைத்து நினைத்துப் பார்க்கிருர்கள். அந்த நினைப்பிலே ஒரு நெகிழ்ச்சி. அந்த நெகிழ்ச்சியிலே ஒரு மகிழ்ச்சி. இப்போது தலைவனுடைய சிந்தனை ஓட்டத்தைப் பார்க்கலாம். பொருளை அறிவால் ஆராய்ந்து அறிய அறியத் தனது அறியாமையே காணப்படுதல் போல

''அறிதோ றறியாமை கண்டற்ருல்
காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு''

என்கிருன். தலைவியோடு சேரும்தொறும், சேரும்தொறும் தான் பெறும் நவநவமான இன்ப அனுபவத்தை நினைக்கிருன். தலைவியின் நலத்தை எல்லாம் எண்ணி எண்ணிப் பார்க்கிருன். மென்மைக்கே இலக்கணமாவது அனிச்ச மலர். அந்த அனிச்ச மலரினும் மென்மையானவள் தன் தலைவியெனக் கருதுகிருன். அவளுடைய கண்கள் குவளை மலர் போன்றவை என எண்ணுகிருன். இல்லை, அதனினும் அழகானவை என முடிவு செய்கிருன். ஏனெனில் இயற்கையாகவே வானை நோக்கி நிற்கும் குவளை மலர்கள் செருக்குடன், செம்மாந்து நிற்பதாகத் தோன்றுகிறது அவனுக்கு. தலைவியின் கண்களைக் காணும் ஆற்றல் இம்மலர்களுக்கு இருக்குமானுல் இப்பெண்ணின் கண்களைப் போல் அவ்வளவு அழகாக இருக்க முடியவில்லையே என எண்ணி வெட்கித் தலை கவிழ்ந்து நிலத்தை நோக்கும் என்கிருன்.

''காணின் குவளை கவிழ்ந்து
நிலன்நோக்கும்
மாணிழை கண்ணெவ்வேம்
என்று''

காணும் சக்தியற்ற மலர்கள் தலைவியின் கண்ணழகைக் காணப் போவதுமில்லை, கண்டு நாணப் போவதுமில்லை, நாணிச் செருக்கை விடப் போவதுமில்லை என்பதெல்லாம் காதல் போதை ஏறியவனுக்கு எங்கே தெரியப் போகின்றது!

தலைவனைப் போலவே தலைவியும், தலைவனின் சிறப்பை எண்ணி எண்ணி மகிழ்கிறாள். தலைவனைப் பற்றிய எண்ணமே தன் நெஞ்சில் உள்ளது. தலைவனது உருவே தன் கண்ணில் உள்ளது என்கிறாள். காதலர் கண்ணுள் இருப்பதால் மையெழுதும் அந்தக் குறுகிய கால அளவுகூடக் கண்ணினின்றும் தலைவன் மறைவதை விரும்பாத அவள்

''கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து''

என்கிறாள். நெஞ்சினுள்ளே உள்ள காதலர் வெம்மையுறுவாரே என்று சூடான எதையும் உண்ணமாட்டாளாம். கண்ணுள்ளே உள்ள தலைவன் கண் இமைத்தால் கண்ணின்றும் மறைந்துவிடுவானே என்று கண்ணிமைக்கக்கூட அஞ்சுகிறாளாம். இதை அறியாத ஊரார் தலைவனைப் பிரிந்ததால் தூங்காமலிருக்கிறாள் என்கிறார்களாம்.

''இமைப்பின் கரப்பாக்கறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னுமிவ் வூர்''

இக்குறளில் தலைவி தன் தூக்கமின்மைக்குக் காரணம் கூறும்போதே அவன் அண்மையில் இல்லையே என்ற கவலையையும், அண்மையிலிருக்க வேண்டும் என்ற வேட்கையையும் நயமாக வெளியிடுகிறாள்.

காதல் மிகுந்து, நிறை கடந்து, கரை கடந்து மறைக்க முடியாது மன்றிற்கு வந்துவிடுகிறது. ஊரார் பலர் தூற்றுகிறார்கள். தலைவியின் உள்ளமோ வருந்துகிறது; மாறாகத் தலைவன் மகிழ்கிறான். அலரில்லையேல் காதல் சுருங்கிக் கருகி உயிரற்றுப் போய்விடும் என்கிறான். பலர் தூற்றத் தூற்றக் காதல் வளர்கிறது என்கிறான்.

இப்படி மாறுபட்ட மனநிலையை - அதாவது அலர் தூற்றுவதால் தலைவிக்குத் துன்பமும் தலைவனுக்கு இன்பமும் ஏற்படும் நிலையை வேறெந்த அகப்பொருள் நூலும் கூறவில்லை. தலைவி தன் நாணம் அழிந்ததையும் பெற்றவர்களுக்கு ஏற்படும் கவலையையும் எண்ணி எண்ணிப் பெண்மைக்குரிய பொறுப்புணர்ச்சியுடன் வருந்துகிறாள். கிடைத்தற்கரியவளாக இருந்த தலைவி தனக்குக் கிடைத்துவிடுவாள் என்பதை எடுத்துக்காட்டுகிறது அலர் என எண்ணி மகிழ்கின்றான் தலைவன்.

தனிமையில் பிறந்த காதல் களவில் வளர்ந்து ஊரரறிய அலர்ந்து உற்றார் தயவால் கற்பில் மணம் வீசி இல்லறத்தில் ஒளிர்கிறது. இல்லறம் காக்கும் தலைவன் இன்றியமையாக் கடமை காரணமாகப் பிரிய நேரும்பொழுது தலைவியை அணுகி, ''சென்று சீக்கிரம் வருவேன்'' என்கிறான். உடனே தலைவி,

''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை''

என்கிறாள். இக்குறளில் பிரிவு என்ற சொல்லைக் கேட்கவே அஞ்சும் தலைவியின் அன்பின் ஆழத்தைக் காண்கிறோம்.

பிரிவால் நலிந்து மெலிந்து காமக் கடும்புனலை நீந்திக் கரை காண முடியாது தனியே நள்ளிரவில் தவிக்கும் தலைவி, உலகில் உள்ள எல்லா உயிர்களையும் அமைதியாக உறங்கச் செய்யும் இரவுக்குத் தான் ஒருத்தியே துணை என்கிறாள்.

''மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்லது இல்லை துணை''

இங்கே தலைவியின் ஏக்கத்தையும் தவிப்பையும் நம்மால் உணர முடிகிறது.

பிரிந்தவர் ஒருவரை ஒருவர் நினைந்து புலம்புகிறார்கள். தலைவனை மறவாத நெஞ்சமே தன் உயிரைக் காப்பதாக நம்புகிறாள். தலைவனோடு சேர்ந்திருந்த அந்த நாளை எண்ணுவதாலேயே உயிர் வாழ்கிறாளாம். தன் வாழ்வை முற்றும் தலைவனுக் காக்கி விட்ட பெண்ணின் பெருஞ்சிலத்தை-தியாகத்தை இந்தக் காதலிலே காண்கிறோம். நினைவிலே நின்றது கனவிலே வருகிறது. அந்தக் கனவை வரவேற்று,

''காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து''

என ஏங்குகிறாள். கனவிலாவது காதலனைக் காண்பதால்தான் தான் உயிரோடு வாழ்வதாகக் கூறுகிறாள் தலைவி,

''காலை அரும்பிப் பகலெல்லாம்
போதாகி
மாலை மலருமிந் நோயை'' -க்கண்டு
கலங்கி

மாலையின் கொடுமையை எண்ணி வருந்துகிறாள். நெருப்புப் போன்ற மாலை நெருங்கி வருகிறது. ஆடு மாடுகளை ஓட்டி வரும் ஆயர் குழலோசை மாலைக்குத் தூதாக வருகிறது. அன்று இனிமையாயிருந்த குழலோசை இன்று கொல்லும் படையாக விளங்குகிறது.

''அழல்போலு மாலைக்குத் தூதாகிக்
குழல்போலுங் கொல்லும் படை''

இப்படி மாலையைக் கண்டு மதி மருண்டு துடிக்கும் தலைவியைக் கண்டு நம் உள்ளம் இரங்குகிறது.

தலைவனை எண்ணி எண்ணிக் கண்ணீர் விட்டு உறுப்பு நலனழிந்து நிற்கும் தலைவி நெஞ்சோடு சொல்லும் பகுதியில் தன் உள்ளத்திற்குள்ளேயே துயரை அடக்கவல்ல நிறை உடையவளாக மாறிவருவதைக் காண்கிறோம். பிரிவுத் துயரிலே பெண்மையின் மென்மை ஆண்மையின் ஆற்றலைப் பெற்று வலிமை பெறுகிறது.

தலைவன் வரவை எதிர்நோக்கித் துடித்துத்கொண்டிருக்கும் தலைவி வந்தவுடன் எப்படியெப்படி யெல்லாம் ஊடுவது என்று எண்ணுகிறாள். அந்த முயற்சி பயன்படாமல் போகுமளவிற்குக் காதல் மிகுந்திருத்தலை உணர்கிறாள். தலைவன் தன் எதிரில் இல்லாத போது அவனது ஒவ்வொரு செயலிலும், குற்றங்களையே காணும் தலைவி, அவனைக் கண்டவிடத்து அத்தனை குற்றங்களையும் மறந்துவிடுகிறாள்.

''எழுதுங்கால் கோல்காணுக் கண்ணே
போல் கொண்கன்
பழி காணேன் கண்ட விடத்து''

கணவன் வந்துவிட்டபோது அவனிடம் குற்றங்காண முடியாத நிலையை மை தீட்டும்போது அஞ்சனக்கோலை காண முடியாத கண்ணுக்கு உவமையாக்கியது நயமான கற்பனை. விரும்பாத தலைவனிடம் விரையும் நெஞ்சை விளித்து, ''தலைவன் பிரிந்திருந்த காலத்து அவன் வரவில்லையே என்று அஞ்சினாய், வந்த பிறகு பிரிந்துவிடுவானோ என்றஞ்சுகிறாய், உன்னால் எனக்கு எப்போதுமே தொல்லைதான்'' என்று கூறுவது அவள் நிலையை நன்கு உணர்த்தும்.

''பெறுஅமை அஞ்சும் பெறின்பிரி
வஞ்சும்
அருஇடும் பைத்தென் னெஞ்சு''

தலைவனும் அப்படியேதான் வருந்துகிறான்.

தலைவன் திரும்பியதும் தலைவி வருகிறாள். தலைவன் தவறு செய்யவில்லை என்பதை அறிந்திருந்தபோதிலும் தவறு செய்ததாகக் கற்பனை செய்துகொண்டு, ஊடுதல் காமத்திற்கின்பம் என விளையாட்டாகவே ஊடுகிறாள். ஒரு நாடகமே நடக்கிறது.

எல்லாப் பெண்களும் கண்ணால் பருகும் அளவுக்கு அழகு படைத்ததனால் பரத்தனாகி விட்ட தலைவனின் மார்பைத் தீண்டேன் என ஊடத் தொடங்குகிறாள்.

''பெண்ணியலார் எல்லாரும் கண்ணின்
பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு''

என்று சொல்லி ஊடும் தலைவியைப் புகழ்ந்து ஊடல் தவிர்க்க விரும்பும் தலைவன் ''காதலர் யாரையும் விட நாம் காதல் மிக்கவர்கள்'' என்கிறான். உடனே தலைவன் பலரைக் காதலிக்கிறான் என்றும், அப்படி உள்ளவர் களில் தங்கள் காதல்தான் சிறந்தது எனக் கூறுகிறான் என்றும் எண்ணிவிடுகிறாள்.

''யாரினும் காதலம் என்றேனா
ஊடினாள்
யாரினும் யாரினும் என்று''

யாரினும் யாரினும் என்று மடக்கி மடக்கிச் சொல்லும் அடுக்கிலே தலைவியின் உள்ளத் துடிப்பையும் தவிப்பையும் உணர்த்தும் உயர்ந்த கவிதையைக் காண்கிறோம்.

ஏதடா, கிணறு வெட்டப் பூதம் கிளம் பியது போலிருக்கிறதே'' என்று எண்ணிச் சமாதானம் செய்யும் நோக்கோடு ''இப் பிறப்பில் ஒருவரையொருவர் விட்டுப் பிரிய மாட்டோம்'' — என்கிறான். ''இந்தப் பிறவிக்கு மட்டும்தான் உறவா? அடுத்த பிறப்பில் என்னைப் பிரியக் கருதிவிட்டாயா?- எனக் கலங்குகிறாள். பேச்சை மாற்றப் ''பிரிந்திருந்தபோது உன்னை அடிக்கடி நினைத்தேன்''--என்கிறாள். ''பிரிந்தவுடன் என்னை மறந்துவிட்டதால்தானே மறுபடியும் நினைக்க நேர்ந்தது-மறந்துவிடும் அளவுக்குத் தான் உமதன்புள்ளது'' என்று ஏங்குகிறாள். ஊடல் நீடிக்கிறதே தவிரக் கூடலுக்கு வழி இல்லை. எனவே, அவள் வாழ்த்தட்டும் என்று தும்முகிறான். வாழ்த்துகிறாள். உடனே ''யாராவது வேண்டியவர் ஒருவர் நினைத்தால் தானே தும்மல்வரும் — உரிமையுடைய நான் பக்கத்திலிருக்க உம்மை நினைக்கும் அந்த மற்றவள் யார்?'' என ஊடுகிறாள்.

''வழுத்தினாள் தும்மினேன் ஆக
அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று''

எனவே, எழுந்த தும்மலை அடக்கிவிடுகிறான். உடனே ''புரிந்துவிட்டது. புரிந்துவிட்டது, உன் காதலி உம்மை நினைக்கிறாள் என்பதை நானறியக் கூடாதென்பதற்காகத் தும்மலை அடக்கி விட்டீர்'' -என்கிறாள். தும்மினா லும் குற்றம்; தும்மலை அடக்கினாலும் குற்றம் என்ற நிலையில் தலைவியிடம் பணி வாகத் தன் அன்பையெல்லாம் உணர்த்து கிறான். இப்படித்தான் பிற பெண்களிடத்தும் பணிந்து பிணக்கைத் தீர்க்கும் வழக்க முடையீர் என்று பிணங்கி ஊடலுக்கு மேல் ஊடல் விளைக்கும் தலைவியின் அழகை உற்று நோக்குகிறான்-ஆம், வேறு பேச வழியில் லாததால்தான், அப்படியும் விட்டீர்களா தலைவி ''எந்த எந்தப் பெண்களின் அழ கோடு என் அவயவங்களின் அழகை ஒப் பிட்டீர்'' என்று வெகுண்டு கூறுகிறாள்.

''நினைத்திருந்து நோக்கினும் காயும்
அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று''

இப்படிப் படிப்படியாக நடக்கும் ஊடல் நாடகம் படிக்குந்தோறும், படிக்குந்தோறும் இன்பம் பயப்பது, இவ்வின்பத்தின் தனிச் சிறப்புக்குக் காரணம் கற்பனையோடு நகைச்சுவையையும் கலந்து கலந்து வழங்குவதுதான்.

வள்ளுவர் தவறு காரணமாக நிகழும் ஊடலைப் பற்றிக் கூறவே இல்லை என்றே சொல்லலாம் ஏதோ ஒன்றிரண்டு அப்படி இருந்தாலும் அது பரத்தையிற் பிரிவால் ஏற்பட்டது எனக் கூறுவதியலாது. சங்க இலக்கியங்களில் வரும் ஊடலுக்கும் காமத்துப் பாலில் வரும் ஊடலுக்கும் மிக்க வேறுபாடு உண்டு. சங்க இலக்கியத்தில் பரத்தையொருத்தி உண்டு. வள்ளுவரின் காமத்துப் பாலில் பரத்தையுமில்லை அவளை நாடிச் செல்லும் தலைவனுமில்லை.

''பொருட் பெண்டிர் பொய்ம்மை
முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று''

என்று கூறும் வள்ளுவரைக் காட்டிலும் பரத்தையர் உறவை வன்மையாகக் கண்டிக்க முடியாது. பரத்தையர் உறவைப் பொருட்பாலில் கண்டிக்கும் வள்ளுவர் காமத்துப்பாலில் பரத்தையிற் பிரிவு பற்றிப் பாடினுரென்று கூறுவது முன்னுக்குப் பின் முரணுகும். சிறந்த ஒழுக்க நூலை உலகுக்கு வழங்கிய வள்ளுவர் பரத்தையிற் பிரிவைப் பாடாது விட்டது பாராட்டிற்குரியது.

கருத்தொருமித்த ஆணும் பெண்ணும், காதலித்துக் களவில் ஒழுகி கற்பில் மணந்து, உலகியல் காரணமாகப் பிரிந்து, பின் கூடி, இசைந்து வாழ்வதே இல்லறமாம் நல்லறம் ஆகும். அந்த நல்லறமே நாட்டை வாழ் விக்கும் பேரறம். இந்த அறத்தைப் பேணி நிற்பவர்களே வேளாண்மையும் வேறு தொழில் களுமியற்றி, பொருளீட்டி, ஈட்டிய பொருளைப் பகுத்துப் பலரும் பயனுறும்படி செய்து அறம் வளர்க்கும் கண்ணுளர்களாய் வாழ்பவர்கள். இவர்களே உலக வாழ்விற்கு உறுதுணை, இப்படி இதயமொத்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே முளைக்கும் அன்பு தம் மக்களிடையே வேர் விட்டு, உற்றூர் உறவினரிடத்துத் தழைத்து, மனிதாபி மானமாகப் பூத்துக் காய்த்துக் கனிவதே வள்ளுவரின் அன்பு நெறியாம் இன்பநெறி.

''அறத்தான் வருவதே இன்பம் ;
மற்றெல்லாம்
புறத்த ; புகழு மில''

என்று பொதுவாக இன்பத்திற்கு நெறி வகுத்த வள்ளுவர் இன்பத்திற்கு வேறு நெறி வகுத்திருப்பார் என்பது தவறு. வள்ளுவர் கூறும் காதல் சிரிய செந்நெறிக் காதல். அங்குப் பயிலும் வழியும், அதனுல் விளையும் பயனுன முடிவும் செம்மையானவையாக இருக்க வேண்டும். செம்மையற்றவற்றிற்கு அங்கு இடமில்லை. வள்ளுவர் காட்டும்காதல் நெறியில் ஆற்றல் மிக்க தலைவன் அமைதி கற்கிருன். அமைதியே உருவான தலைவி ஆற்றல் பெறுகிருள். வன்மை மென்மை எய்துகிறது. மென்மை வன்மையடைகிறது. வள்ளுவனின் இன்பநெறியில் காதலரின் தன்னலம் பேணுத் தகைமை, கனிந்த அன்பின் உயர்வு, துன்பத்தை ஏற்றுத் தவமியற்றும் தன்மை, பிறர்க்கென வாழ்ந்து தியாக சீலத்தைப் பெருக்கும் பெருமை ஆகியவற்றைக் காண்கிருேம். தன்னிலே பிறந்த காதல், ஒரு பெண்ணிடம் படர்ந்து மண்ணிலே வளர்ந்து, விண்ணைத் தொடும் விந்தையைக் காண்கிருேம். நுண்ணிய உணர்வுகளைத் தெள்ளத்தெளிய உரைத்துத் தூநெறிப்படுத்தி உலகை உய்விக்க எழுந்த கலைக்கருவூலமே காமத்துப்பால். கற்பனைகள் பல உலகியல் கடந்தவை என்ருலும் புதுமை யான, அருமையான, கவிதையின்பம் நல்கும் நல்ல கற்பனைகள். பெண்ணுக்குத்தான் நிறை, ஆணுக்கு அஃது அவசியமில்லை என்ற தறுகண்மையைத் தகர்த்து ஆணுக்கும் பெண்ணுக்கும் கற்பைப் பொதுவாக்கி பெண்ணடிமைத் கொள்கையைத்தூவென்று தள்ளி ஆண்களோடு பெண்களும் சரிநிகர் என்று போதித்த உலக முதற் பெருமகன் வள்ளுவரே. ஒருத்தனுக்கு ஒருத்தி என்ற உயரிய வரம்பிலே நின்று ஒப்பற்ற இலட்சிய வாழ்க்கை வாழ வழி வகுத்துக் கொடுத்தவர் வள்ளுவர். அவரது அடிச்சுவட்டில் நின்ற தால் தான் கவிச் சக்கரவர்த்தி கம்பனுல், 'இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தை யாலும் தொடேன்''- என்று பேசும் இராமனைப் படைக்க முடிந்தது.

இராமன் வீரத்தைப் புகழும்போது, ''தமிழ் நெறி வழக்கம் அன்ன தனிச்சிலை வழக்கு'' என்றே பேசுகிருன் கம்பன். பிறன் மனை நோக்காத பேராண்மையைப் பேசும் போது ஒருத்தனுக்கு ஒருத்தி என்ற உண்மையை உணர்த்திவிடுகிருன். பெண் மையின் பெருமையை, நிறை காக்கும் திண்மையை, மிக மிக அழுத்தமாகவே அறத்தில் பேசுகிருர் வள்ளுவர். ''தெய்வம் தொழாஅள் கொழுநற் ருெழுதெழுவாள்''

என்று கூறுவதால் பெண்களை அடிமைகளாகக் கருதுகிறார் என்பவர்களுடைய வாதம் மேலே உள்ளவற்றைக் கருதும்போது இளைத்த வாதமாகவே தோன்றுகிறது.

வாத்ஸ்யாயனரின் ''காமசூத்திரத்தைப்'' படித்து விட்டுத்தான் வள்ளுவன் தன் காமத்துப்பாலைப் பாடிவிட்டான் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். அவர்களை அறிஞர்கள் என்பதைக் காட்டிலும் அறியார்கள் என்றே கூறிவிடலாம். ஏனெனில், காம சூத்திரம் ஆண் பெண் உறவைப் பற்றியும், மன இயல்புகள் பற்றியும், விளைவுகள் பற்றியும் விளக்கமாகவும் விரிவாகவும் கூறும் இலக்கண நூல், கொக்கோகரின் நூலும் இது போன்றதே. இவற்றினின்றும் வேறுபட்டு, காதல் சாத்திரமாக இல்லாது இலக்கியமாக அமைந்த ஒன்றே காமத்துப்பால். மேலும், ''காமசூத்திரம்'' வள்ளுவருக்கு மிகவும் பிந்திய நூலாகத்தானிருக்க முடியும். முந்திய நூல் என்பதற்கு ஆதாரமில்லை.

தலைவன் தலைவி இருவரது உள்ளப் பாங்கையும், நுண்ணிய மெல்லுணர்வுகளையும் உணர்ந்து, வெளிப்படுத்தும் திறம் நினைந்து நினைந்து மகிழ வேண்டிய ஒன்று. குறுகிய குறட்பாவிலே தாம் படைத்த பாத்திரங்களாகவே மாறி மாறிப்பேசி, கவிதைச் சுவையை வாரி வாரி வழங்கும் ஆற்றல் ரஸவாத ஆற்றல்தான். வள்ளுவரைப்போல் ஆண், பெண் உளப் பாங்கறிந்தவர், உளநூல் ஆசிரியர் இன்று வரைபிறக்கவில்லை என்றுகூடச் சொல்லாம். ★

---

### நிறைவு பெற

பெரும்பாலும் ஆண் இளமை நிரம்பிய போது அறிவு சிறந்து உணர்வு வளர்ந்து விளங்குகிறான். பெண், இளமை நிரம்பிய போது உணர்வு சிறந்து அறிவும் வளர்ந்து விளங்குகிறாள். வளர்ச்சிக்கு உரிய வித்துக்கள் விளையாட்டுப் பருவத்திலேயே காணப்படுகின்றன. அமைதியாக இருந்து பெண் சிற்றில் இழைக்கும் பருவத்தில் ஆரவாரமாக இயங்கி ஆண் சிற்றில் சிதைக்கும் நிலையில் இருக்கிறான். இவ்வாறே சிறுமியின் மனம் பெரிதும் ஆக்கவேலையில் முனைந்திருக்க, சிறுவன் மனமோ அழிவு வேலையில் ஊக்கம் காட்டுகின்றது. அதனால் பெண் அமைதி மிக்கவளாக வளர்கிறாள்; ஆண் ஆற்றல் மிக்கவனாக வளர்கிறான். இது இயற்கையின் வியக்கத்தக்க முறையாக அமைந்திருக்கின்றது.

ஆனால், அமைதிமட்டும் பெற்றிருப்பதோ வாழ்க்கைக்குப் போதாது, அமைதிக்கு ஆற்றல்வேண்டும்; ஆற்றலுக்கு அமைதி வேண்டும். இயற்கையே இதற்கும் வழி வகுத்திருக்கிறது ஆணின் இளமை பெண்ணைக் கவரவும், பெண்ணின் இளமை ஆணைக் கவரவும், கவர்ச்சி அமைந்துள்ளது. உடலில் உள்ள இளமை அழகுமட்டும் அல்லாதல், உள்ளத்தில் உள்ள இளமைப் பண்பும் ஒருவரை ஒருவர் கவருமாறு அமைந்துள்ளது. இத்தகைய தூய கவர்ச்சியே காதல் எனப்படுவது. காதல் உறவினால் ஆற்றல் மிக்கவன் அமைதியைக் கற்றான்; அமைதி மிக்கவள் ஆற்றலைக் கற்கின்றாள்.

- டாக்டர் மு. வரதராசனார்

— திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் — பக் 39-40

# ஸ்ரீ சங்கரர் அவதாரம்




இந்திய தேசியப் பேராசிரியர் டாக்டர் டி. எம். பி. மகாதேவன்

சங்கரர் அவதரித்த காலம் நாம் வாழும் காலம் போலவேயிருந்தது. ஆன்மிகத் துறையிலும் சமூக வாழ்க்கையிலும் சீர்குலைந்த காலமது. நம் நாடு அவலமுற்றிருந்த நிலையைச் சங்கரர் இவ்வாறு வர்ணிக்கின்றார். தமது பிரம்ம சூத்திர பாஷ்யத்தில்: ''இப்போதுள்ள மக்களால் தேவதைகளோடு எவ்வாறு பேசமுடியவில்லையோ அவ்வாறே பண்டைக் காலத்து மக்களாலும் பேசமுடியவில்லை, என்று வாதிப்பது இப்பொழுது ஏக சக்ராதிபதி இல்லாததால் முற்காலத்திலும் இருந்ததில்லையென்று வாதிப்பதுபோல் உள்ளது; அல்லது வர்ணாச்ரம தர்மங்கள் இன்று கேடுற்றுள்ளன போலவே அப்போதும் இருந்தன வென்பது போலுள்ளது.''[1]

சங்கரர் அவதரித்த காலத்தில் நம் இந்திய நாடு அரசியலில் பிளவுற்றும் சமூகவியலில் வழிதவறியும் காணப்பட்டது. பல சிறு அரசுகள் ஒற்றுமையின்றி ஒன்றோடொன்று சண்டையிட்டுக்கொண்டு அதது மேலோங்க வேண்டுமென்று முயற்சித்து வந்தன. பகையினால் பகை வளர்ந்தது; சுயநலம், பொறாமை - இவற்றிற்கு அமைதி பலிக் கடாவாயிற்று வேதங்களில் எழுத்துக்கெழுத்து பொருள் கொண்டு (உட்கருத்தை உணராமல்) வேள்விகள் புரிவதே தத்தம் கடமையென்று எண்ணியவர்கள் ஒரு புறம் இருந்தனர். மற்றொரு புறம் சூன்யவாதிகளும் நிரீச்வரவாதிகளும் தூய்மை, பழமை இவற்றைத் தகர்த்தெறிவதே தத்தம் குறிக்கோள் என மதித்துத் திகழ்ந்தனர். தத்துவத் துறையிலும் சமயத் துறையிலும் வேற்றுமையும் வெறுப்பும் மலிந்து கிடந்தன. 'உள்ள பொருள் ஒன்றே' என வேதம் கூறும் உண்மையைப் படித்தவரும் படிக்காதவரும், வைதிகர்களும் லௌகிகர்களும் மறந்துவிட்டனர். தலைவர்களும் அவர்களைப் பின்பற்றுபவர்களும் மதத்தில் மன அமைதியைக் காண்பதற்குப் பதிலாக ஆக்ரகத்தையும் அடக்குமுறையையும் கண்டனர்.

அப்பேர்ப்பட்ட இக்கட்டான, குழப்பம் மிகுந்த காலத்தில்தான் சங்கரர் அவதரித்தார் சிறிது காலந்தான் இவ்வுலகில் வாழ்ந்தார். தம் வாழ்நாட்களை யெல்லாம் மக்களின் அஞ்ஞானத்தினை அகற்றி ஆன்ம ஞானத்தைப் பரப்புவதில் செலவிட்டார். சமூகம் நோய்வாய்ப்பட்ட காரணத்தைக் கண்டு பிடித்து அதற்குப் பரிகாரம், 'உள்ள பொருளை உணர்வதே' என்பதை உபதேசித்தார். 'உள்ள பொருள் இரண்டற்றது' என்று உபநிஷதங்கள் போதிக்கின்றன. இப்போதனை எக்காலத்திற்கும் பொருத்தமானது என்றாலும் நாம் வாழும் காலத்திற்கு எவ்வளவு விசேஷப் பொருத்தம் பெற்றுள்ளதோ அவ்வாறே சங்கரர் காலத்திற்கும் தனிப்படப் பொருந்தியதாய் இருந்தது.

பரசிவம் - 'மேலான ஆனந்தம்' - தாம் அவதரிப்பதற்கு வேண்டிய இடம், குலம், காலம் இவற்றைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். காலடி[2] என்பது அமைதி நிறைந்த கிராமம், இது சூர்ணா, (பூர்ணா, ஆலவாய், பெரியாறு - வேறு பெயர்கள்) நதிக்கரையில் உள்ளது. கேரளத்தில் ஆலவாய் நகரத்திற்குச் சுமார் ஆறுமைல் தூரத்தில் இருப்பது[3].

1. பிரம்ம சூத்திர பாஷ்யம் - 1, iii, 3.3
2 சிவரகசியத்தில் — 'சசலம்' என்பது கிராமத்தின் பெயராக வருகிறது
3. பெரியாறு நீர்த்தேக்கம் அமைக்கப் பெற்ற பிறகு பெரியாற்றின் நீர் மதுரை மாவட்டத்தின் கீழ்த்திசையிலுள்ள நிலங்களுக்குப் பாசனம் செய்யப்படுகின்றது. மதுரை பண்டைத் தமிழ் நூல்களில் 'ஆலவாய்' என்று அழைக்கப்படுகின்றது.

வாரணுசியிலுள்ள தாரக மடத்து நூல் நிலேயத்திலிருக்கும் ஆனந்த கிரியின் சங்கர விஜயத்தின் பழைய கையெழுத்துப் பிரதியில் காலடி என்ற நேர்த்தியானதொரு ஊர் கேரளத்திற்கு அணிகலன் போலுள்ளது என்று வர்ணிக்கப்படுகிறது. அவ்வூரில் சிவகுரு, ஆர்யாம்பா என்ற நம்பூதிரி குலத்தைச் சேர்ந்த உத்தமத் தம்பதிகள் வசித்து வந்தனர்[1]. சமீப காலம் வரையில் கேரளத்தில் உள்ள நம்பூதிரிகள் தான் வைதிகப் பண்பாட்டைக் காப்பாற்றி வந்தனர். அநேகமாக ஒவ்வொரு நம்பூரிப் பையனும் வேத அத்யயனத்திலும் வைதிகக் கலேயிலும் சீரியமுறையில் பயின்று வந்தான். இதற்குப் பிறகுதான் வேண்டுமானுல் நவீனமுறையில் நடத்தப்படும் பள்ளிக்கு அனுப்பப்பட்டனர். சமீபகாலத்திலேயே அவ்வாருன நிலே நிலவி யிருந்ததென்ருல் சங்கராவதாரக் காலத்தில் கேரளீய பிராமணர்கள் வைதிகப் பண் பாட்டின் முன்னணியில் விளங்கினர் என்று சொல்ல வேண்டுவதில்லே. சங்கரரின் பெற்ருேராக விளங்கப் போகும் சிவகுருவும் ஆர்யாம்பாளும் பொருள் நிறைவும் அருள் நிறைவும் பெற்ற நம்பூதிரிக் குடும்பங்களேச் சேர்ந்தவர்கள். சிவகுருவின் தந்தையார் வித்தியாதிராசர் என்பவர்[2]. ஆர்யாம்பாளின் தகப்பனுர் மகாபண்டிதர் என்பவர். தக்க வயது வந்ததும் சிவகுரு ஒரு குருகுலத் திற்கு அனுப்பப்பெற்ருர். படிப்பு முடிந்ததும் அவருக்கு ஒரு மனேயாளே அடைந்து குடும்ப

1. சிவகுரு என்ற பெயர் கேரளத்தில் அபூர்வமானது. சங்கராசாரியார் சிவாவதார மென்பதால் சங்கரர் பிறந்தபின்னர் அவருடைய தந்தைக்குச் 'சிவகுரு' என்பது காரணப் பெயராக ஏற்பட்டது என்று எண்ணலாம். வேருெரு வகையிலும் இப்பெயர் ஏற்பட்டிருக்க லாம் என்று ஊகிக்கக் காரணம் உண்டு. 'சிவகுரு' அல்லது 'சிவகுருநாதன்' என்ற பெயர் கும்பகோணம் தாலுக்கா, தஞ்சை மாவட்டத்தில் அல்லாது வேறு எந்தப் பகுதியி லும் வழக்கில் இருப்பதாகத் தெரியவில்லே. பிள்ளேகளுக்கு அண்மையிலுள்ள கோயில் தெய்வத்தின் பெயரையோ குலதேவதையின் பெயரையோ இடுவது வழக்கம். பரசுராம க்ஷேத்திரம் எனப்படும் கேரளத்தில் ஒரு வரலாறு கூறப்படுகிறது. இந்திய நாட்டின் மேற்குக் கரையில் கடலிலிருந்து நிலப்பகுதியை மீட்ட பின்பு கீழ்க்கரை பிரதேசத்தி லிருந்து சில பிராமணர்களேக் கொணர்ந்து அங்கே குடியேற்றினர். அமெரிக்காவில் குடியேறிய 'பில்க்ரிம் ஃபாதர்ஸ் எவ்வாறு தாங்கள் எந்த நாட்டிலிருந்து வந்தனரோ அந்த நாட்டிலுள்ள ஊர்களின் பெயர்களேத் தமது புதிய இடங்களுக்கு வைத்தனரோ அதுபோலவே கேரளத்தில் குடிபுகுந்தவர்கள் தம்முடைய பழைய ஊர்களின் பெயர் களேக் கேரளத்தின் ஊர்களுக்கு இட்டனர். இதற்கு ஓர் எடுத்துக்காட்டு 'ஆலவாய்' என்பது. அதேபோன்று 'திருச்சூர்' என்பது நம்பூதிரிகள் மரபில் 'திருசிரபுரம்' என்று வழங்கப்படுவது. சிவகுரு திருச்சூரிலுள்ள சிவக்ஷேத்திரத்தில் புத்திரப் பேற்றுக்காகத் தவம் புரிந்தார் என்று சங்கர விஜயங்களில் கூறப்படுகின்றது கீழ்க் கரையில் கும்ப கோணத்திற்கருகில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த நாயன்மார்களால் பாடப் பெற்ற 'திருசிவபுரம்' என்ற சிவஸ்தலம் ஒன்று உள்ளது. ஆகையால் கும்பகோண வட்டாரத்தில் 'சிவகுரு அல்லது 'சிவகுருநாதன்' என்ற பெயர்கள் வழக்கத்தில் இருக்கின்றன. திருசிவபுரத்தின் ஈஸ்வரர் பெயர் 'சிவகுருநாதன்'. அதனுல்தான் கும்பகோணத்து வட்டாரத்தில் 'சிவகுரு', 'சிவகுருநாதன்' என்னும் பெயர்கள் வழங்கப் பெறுகின்றன. திருச்சூரிலுள்ள கோயில் சிவபுரத்துக் கோயிலேப் பின்பற்றியதாய் இருக்கலாம். சங்கரருடைய தந்தையின் பெயர் கும்பகோணத்திற்கு அருகேயுள்ள தமது குல தெய்வம் சிவகுருநாதரின் பெயராய் அளிக்கப்பட்டிருக்கலாம்.

2. கேரளத்தில் நிலவும் ஒரு மரபுப்படி கைப்பிள்ளி இல்லம் என்றதொரு நம்பூதிரி இல்லத்தைச் சேர்ந்தவர்.

வாழ்வில் ஈடுபட மனமில்லாதிருந்தது. தம் வாழ்க்கையைத் தீவிரமான கல்விக்காகவும் ஆன்மிக அனுஷ்டானங்களுக்காகவும் அர்ப்பணிக்கவேண்டுமென் றிருந்தார். ஆனால், தமது இல்லம் திரும்பியதும் அவருடைய தாய் தந்தையர் திருமணத்திற்குச் சம்மதிக்கும்படி வற்புறுத்தினர். ஆர்யாம்பா அவருக்கு இல்லாளாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றாள். திருமணத்திற்குப் பிறகு பக்தி நிறைந்த அத்தம்பதிகள் சீரிய முறையில் தமது இல்லறத்தை நடத்திவந்தனர். வைதிக கர்மாக்களை முறை தவறாது புரிந்துவந்தனர். தமது உதவியை வேண்டுவோர்க்கு அளித்து வந்தனர்.

சிவகுருவும் ஆர்யாம்பாளும் எல்லாச் சௌபாக்கியங்களும் பெற்றிருந்தனர். அறம், பொருள், கல்வி, விநயம், பெருந்தன்மை, உதாரகுணம் இவை யாவும் அவர்களிடம் பொலிந்திருந்தன. ஆனால், ஒரே ஒரு குறையிருந்தது. பல ஆண்டுகள் கழிந்துங்கூடப் புத்திர பாக்கியம் கிடைக்கவில்லை. ஒருநாள், சிவகுரு தம்முடைய மனவருத்தத்தைப்பற்றி ஆர்யாம்பாளிடம் சொல்லிக்கொண்டார். அம்மாது கணவருக்கு ஆறுதல் கூறும் வகையில் ''எல்லோருக்கும் கல்பதருவாக விளங்கும் சிவபிரானிடம் சரண் அடைவோம்'' என்றாள். இருவரும் இப்பொழுது திருச்சூர் என்று அழைக்கப்படும் அண்மையிலுள்ள சிவக்ஷேத்திரத்திற்குச் சென்று' 'பஜனம்'' புரிந்தனர் 'பஜனம்' என்பது 'சேவை புரிவது' 'வழிபடுவது' என்று பொருள் தரும் தாதுவிலிருந்து வந்த சொல். திருச்சூரில் பஜனம் செய்பவர்கள் அங்குச் சில நாட்கள் தங்கி அல்லது மாதங்கள் தங்கி, தினமும் ஆற்றில் நீராடி, கோயிலுக்குச் சென்று சிவனை வழிபடுவார்கள், தம்முடைய நியாயமான விருப்பங்கள் நிறைவேறுவதற்காகத்திருச்சூர்க் கோயில் அந்நகரத்தின் மையத்தில் ஒரு மேட்டின் மேல் உள்ளது. அந்த மேட்டிற்கு 'வ்ருஷாசலம்' (இடபக் குன்று) என்பது பெயர் 'திருசிவப்பேரூர்' என்பது அவ்வூருக்கு மக்களிடையே பரவலாக வழங்கும் பெயர். இப்பெயர் மருவித் 'திருச்சூர்' என்று ஆயிற்று. சிவகுருவும் ஆர்யாம்பாளும் அவ்வூருக்குச் சென்று பல காலம் பஜனம் புரிந்தார்கள்.

சிவகுரு ஆர்யாம்பா தம்பதிகளின் தூய்மையையும் தவச் சிறப்பையும் கண்டு மகிழ்ந்த பரமேசுவரன், ஓர் இரவு கிழவுருவம் தாங்கி அவர்கள் கனவில் தோன்றி, ''நீண்ட ஆயுள் பெற்ற – ஆனால், மூடர்களான பல மக்கள் வேண்டுமா? அல்லது மேதாவியான, ஆனால், அல்பாயுளுள்ள ஒரு மகன் வேண்டுமா?'' என்று வினவினர். என்ன கேட்பதென்று தெரியாமல் ஈசனுடைய உள்ளம் எவ்வாறோ அவ்வாறே நடக்கட்டும் என்று அவன்மீதே பாரத்தைப் போட்டுவிட்டனர். பரமேசுவரன் தாமே அவர்களுக்கு மகனைப் பிறக்கப்போவதாக அருள்பாலித்து அவர்களைக் காலடிக்குத் திரும்பிச்செல்லுமாறு பணித்தார். மிக்க மகிழ்ச்சியோடு அவர்கள் தம்முடைய ஊருக்குத் திரும்பினர். வறுமையுற்றிருந்த மக்களுக்குச் சிவகுரு தான தருமங்கள், செய்தார். அண்மையிலிருந்த நல்லோருக்கு விருந்தோம்பிச் சன்மானங்கள் அளித்தார். அதிதிகள் உணவு அருந்திய பிறகுதான் சிவகுரு ஆர்யாம்பா தம்பதிகள் உணவருந்துவார்கள். பிராமண போஜனத்திற்குப்பின் உட்கொள்ளப்பட்ட பிரசாதத்தின் மூலம் பரமேச்வரனின் திவ்ய தேஜஸ் ஆரியாம்பாளின் சரீரத்திற்குள் புகுந்தது என்று சொல்லப்பெறுகின்றது காலக்கிரமத்தில் ஆரியாம்பாள் கருவுற்றாள். ஒரு புதிய ஒளி அவளிடம் காணப்பெற்றது. ஒளிக்கு ஒளியான பரமேசுவரனே அவளைத் தாயாக வரித்துவிட்டா ரல்லவா!

அவதரிப்பதற்கு உகந்த உத்தமமான காலம் வந்துவிட்டது – புனர்வசு நக்ஷத்திரம், வைசாக மாதம், சுக்ல பக்ஷம், பஞ்சமி திதி, நண்பகல் (ஏப்ரல்-மே). சங்கரர் அவதரித்த காலத்தில் இயற்கை எழில்மிகு காட்சி அளித்தது என்று சங்கர விஜயங்கள் வர்ணிக்கின்றன. மரஞ்செடி கொடிகள் யாவும் பூத்துக் குலுங்கின. வானம் பளிச்சென்றும் மாசற்றதாகவும் விளங்கியது. பிறவிச்

சத்துருக்களான விலங்குகள்கூட ஒன்றுக் கொன்று உறவு கொண்டாடின.

இந்தியத் தத்துவ-கலாசார வரலாற்றில் கால நிர்ணயம் செய்வது கடினமான காரியம். சங்கர அவதாரக் காலமும் 'இதுதான்' என்று சொல்லுவதற் கில்லை. கர்ண பரம்பரையாகச் சொல்லப்படுவது: நந்தன ஆண்டு, வைசாக மாதம், சுக்ல பக்ஷத்துப் பஞ்சமி திதி. ஆனால், எந்த நந்தன ஆண்டு? துவாரகை, பூரி, காஞ்சீ மடங்களின் பட்டியல்கள்படி இந்த நந்தன ஆண்டு கி. மு. 509-ல் நேர்ந்தது, (கலியுகம் 2593) சம்பந்தப்பட்ட நூலாசிரியர்களெல்லாம் அனேகமாக ஒருமுகமாகச் சங்கரர் முப்பத் திரண்டு (32) ஆண்டுகள் வாழ்ந்தார் என்று கூறுகின்றபடியால் அவருடைய காலம் கி.மு. 509–477ஆக இருக்கவேண்டும். ஜின விஜயம் என்ற ஒரு ஜைன நூல் மறைமுகமாக இந்தக் கால நிர்ணயத்தை உறுதிப்படுத்துகிறது. குமாரில பட்டர் பிறந்த ஆண்டு கி மு. 557 என்றும் அவர் சங்கரரைச் சந்தித்த ஆண்டு கி.மு. 494 என்றும் சங்கரர் மறைந்த ஆண்டு கி. மு. 477 என்றும் கூறுகிறது[1]. ★

---

1. சிவரஹஸ்யமும் பவிஷ்யத் புராணமும் சங்கரர் கலிபிறந்த இரண்டாயிரம் வருஷங்-களுக்குப் பிறகு தோன்றுவார் என்று கூறுகின்றன.

## கிறிஸ்தவ வேதாந்தம்

வேதாந்த தரிசனத்தைப் போதித்தவர்க்குள் மிக உயர்ந்தவர் சங்கராசாரியார். அழுத்தமான ஆராய்ச்சியறிவால் அவர் வேதங் களினின்றும் வேதாந்த உண்மைகளைக் கடைந்தெடுத்து, அவற்றை ஆதாரமாகக் கொண்டு, தமது பாஷ்யங்களிற் போதிக்கப்பட்டுள்ள ஆச்சரியமான ஞானக்கொள்கையை அவற்றின்மீது அமைத்தார். ஒன்றுக்கொன்று முரண்பாடான, பிரம்மத்தைப் பற்றிய வருணனைகள் அனைத்தையும் ஒன்றுசேர்த்து, அகண்ட மெய்ப்பொருள் ஒன்றே உள்ளது என்பதை எடுத்துக்காட்டினர். ஏறும் பாதையிலே மனிதன் மெல்லமெல்லத்தான் செல்ல இயலுமாதலின், வேறுபடும் உரைகள் யாவும் வேறுபட்டுவரும் அவனது திறனுக்கு ஏற்றவாறு அமைதலின் அவசியமாவன என்பதையும் எடுத்துரைத்தார். இது போன்ற ஒரு முறையை இயேசுநாதரது போதனைகளிலும் காண்கிறோம்; அம்மொழி களைக் கேட்போரின் பல திறப்பட்ட ஆற்றல்கட்கு ஏற்றவாறு அவை அமைந்தது வெளிப்படையே......இறுதியாக அவர் 'யானும் என்பிதா வும் ஒருவரே'' என்றும், ''பரலோக மண்டலம் உங்களுள்ளே இருக் கிறது'' என்றும் கூறி, அவர்களுக்கு மிக உயர்ந்த உண்மையை விளக்கினர்.

— சுவாமி விவேகானந்தர்

(விவேகானந்த ஞானதீபம் - 8 பக் 45)

# தமிழே! நீ அமிழ்தா? எழிலா?



மேதகு ஜஸ்டிஸ் எஸ். மோகன்

தமிழுக்குத்தான் எத்தனை எழில்! அந்த எழிலின் தோற்றம் எத்தனையோ. இயற்கை எழில், இலக்கிய எழில், இசையின் எழில், நாடகத்தில் எழில், நாட்டியத்தில் எழில் – இப்படிப் பல எழில்கள் உண்டு.

ஒரு மொழியின் மேம்பாடு, அது எழுப்பும் ஒலியில், இசையில் ... ... ஒலிக்கும்பொழுது உருவம் வந்து தெரியவேண்டும், உணர்ச்சி வந்து பொங்க வேண்டும். அதுதான் அந்த மொழிக்கு ஏற்றம்; எழில்.

கலிங்கத்துப் பரணிக்கு, போவோம்:

முதல் குலோத்துங்க சோழன், கலிங்க நாட்டை வீறு கொண்டு போர் செய்து, வெற்றி கண்டதை வரலாறு நமக்கு அறிவிக்கின்றது. அந்தப் போரை இன்ப இலக்கியமாய் நமக்குத் தந்தார் கவிஞர் பெருமான் செயங்கொண்டார். போர்க்களம் என்ருலே, வெறுப்புத்தான் முன் வரும். அலை ஓசையும், பிணக் குவியல்களும், ரத்த ஆறும், எலும்பு மலைகளும் நம் கண்முன்னே வந்து நிற்கும். அந்த வெறுக்கத்தக்க போர்க்களத்தை, அருவருக்கத்தக்க அவலக்காட்சியை இலக்கியமாய், இன்பக் காவியமாய்ப் படைத்த பெருமை செயங்கொண்டாரையே சேரும். போர்ப் படைகளின் ஆரவார வீர நடையை, பீடுநடையை எடுத்து இயம்புகின்ருர் ஓசை நயத்தோடு:

'எடு மெடு மெடு மென எடுத்ததோர்
இகலொலி கடலொலி இகக்கவே
விடு, விடு, விடு, பரி கரிக் குழாம்
விடும், விடும் என ஒலி மிகைக்கவே''

இதைக் கேட்கும் பொழுதே வீரக்கனல் நம்முள்ளத்தில் எழுவதை உணர்கின்ருேம். இது அன்றைய ஓசை எழில்.

மாழை நாட்டு மன்னன், கொன்றை நாட்டிற்கு விடுதலை அளிப்பதாகப் பறை சாற்றினன். அடிமைத் தளை அறுபடப் போகின்றது என்பதைக் கேட்ட மக்கள் அளவிலா மகிழ்ச்சி எய்தினர். எத்தகை மகிழ்ச்சி? பக்குவம் பெற்ற சான்ருேர் சிலர் தக்கது, தக்கது என்றனர். உணர்ச்சி மிகுந்தோர் தம் பழம் பெரு நாட்டின் பெருமை பாடி மகிழ்ந்தனர். காதலன் ஒருவன், காதலியைக் கட்டிப் பிடித்து இறுக அணைக்கின்ருன். இவைகளுக்கு எல்லாம் மேலாக மூதாட்டி ஒருத்தி உள்ளத்தில் நிரம்பிய உவகையைப் படம் பிடித்துக் காட்டுகிருர் பாவேந்தர் பாரதிதாசன்.

அவளோ, குடு குடு கிழவி, கல்லுரலில் மெல்லிலை இட்டு, மெல்ல இடிக்கின்ருள். விடுதலைச் செய்தி விளம்பக் கேட்டதும், அவள் உள்ளத்து மகிழ்ச்சி, கை வழி இறங்கி உள்ளத்தின் வேகம், உரல் இடியில் ஒலித்ததாம், தட, தட வென்று

இதுதான் பாட்டு:

''பல்லிலாக் கிழவி கல்லுரல் இட்ட
மெல்லிலைக் காயினை மெல்ல இடிக்கையில்
விடுதலைச் செய்தி விளம்புதல் கேட்டதால்
தடதட வென்றே இடிபட் டதுகல்''

இது இன்றைய ஓசை நயம், ஒலி நயம்.

அடுத்து வேதனை எழில்:

''இடுக்கண் வருங்கால் நகுக'' என்று இயம்புகிறது குறள். எத்தனை துயர் வந்தாலும், இடைஞ்சல் ஏற்பட்டாலும், இன்முகத்தோடு ஏற்றுக்கொண்டு, வேதனைக் குரலே இலக்கியமாகி ஒலிப்பதைத் தமிழில்தான் காணமுடியும்.

பாண்டிய மன்னனைப் பாடிப் பரிசில் பெற மதுரைக்கு வந்தார் சத்திமுற்றப் புலவர். நல்ல குளிர்காலம். ஒரு மாடத்தின் மூலையில் முடங்கிக் கிடந்தார். தம்மைக் குளிரிலிருந்தும் காக்கப் போர்வை ஏதும் இல்லாததால், கைகளால் உடலைப் போர்த்திக்கொண்டார். வாடைக் காற்று அவரை மிகவும் வாட்டியது. அப்பொழுது இரண்டு நாரைகள் அவ்வழியே பறந்து சென்றன. அவைகளைப் பார்த்ததும் கவிஞரின் கற்பனைச் சிறகு விரிந்து பறக்க தொடங்கியது.

''நாராய், நாராய், செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்

பனங் கிழங்கைப் பிளந்தது போன்ற கூர்மையான அலகைக் கொண்ட நாராய் என விளித்தார். முன்பே சொன்னேன் இரண்டு நாரைகள் என்று. இருந்தும் ஒன்றை மட்டும் ஏன் விளிக்கிறார் என்றால், கணவன் மனைவியுமாக வரும் அந்த இரண்டு பறவைகள், ஈருடலாக இருந்தாலும், ஒருயிராய் இருக்கின்றன. எனவே, ஒன்றைக் குறிப்பிடுவது தான் பண்பு.

கணவனும் மனைவியுமாகச் செல்லும் பறவைகளின் பயணக் குறிக்கோள் எது என்பதைச் சொல்கிறார்.

'தென்திசைக் குமரி யாடி
வடதிசைக்கு ஏகுவீ ராயின்'

பாண்டிய நாட்டிற்கு வடக்கே என்னூராகிய சத்திமுற்றம் இருக்கின்றது. நீங்கள் அங்கே செல்வீரானால் என்றார். ஏன் என்றால் ஏழைப் புலவர் அதிகாரம் செய்யத் துணிவில்லை. எனவேதான் 'செல்லுங்கள்' என்று கட்டளை இடவில்லை. காதற்பறவைகளுக்கு வேண்டுகோள் விடுக்கின்றார் :

'எம்மூர் சத்தி முற்ற வாவியுள் தங்கி
நனைசுவர் கூரை, கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்கும் என் மனைவியைக்
கண்டு
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திப்
பேழையுள் இருக்கும் பாம்பென
உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே''

நீங்கள் தம்பதிகளாக எம் பதியான சத்தி முற்றத்துக்குச் செல்லுங்கள். நிம்மதியாகத் தங்குவதற்குத் தாமரைத்தடாகம் உள்ளது. ஏழையேன் வீட்டைக் கண்டு பிடிப்பது கடினமில்லை. ஓலை வேய்ந்த கூரை அதுவும் நனைந்த கூரை, என்னைப் பரிசோடு எதிர்பார்த்திருக் கொண்டிருப்பாள் என் மனைவி. அதற்கான சகுனம் பல்லியின் ஒலியில் பார்த்துக் கொண்டு இருப்பாள். குறத்தியிடம், குறி கேட்கக் காசில்லை. காசின்றிக் குறி சொல்லப் பல்லிகளுக்கோ வீட்டில் பஞ்சமில்லை. என் மனைவியிடம் சொல்லுங்கள் ஆடையின்றி, வாடையால் வாடுகிறேன், பெட்டிப் பாம்பாய்ச் சுருண்டு கிடக்கின்றேன், ஏழை நான் என்று''.

வேதனையால் பாடும்போதும், வேடிக்கைக்குக் குறைவில்லை.

(Blow, Blow thy winter wind)

அது அன்றைய வேதனை எழில்.

இனி இன்றைய வேதனை எழிலைப் பார்ப்போம்.

புதுமைப்பித்தன் அவர்கள் காசநோயால் கடும் அவதிப்பட்டுக் கொண்டிருந்த காலம். புனவில் தங்கியிருந்தார். தம் நெருங்கிய நண்பர் பம்பாய் வந்திருந்ததாகக் கேள்விப் பட்டார். அவரைப் போய்ப்பார்க்க முடியவில்லையே என ஏக்க மிகுதியாய் எழுதுகின்றார்.

கையது கொண்டு, மெய்யது பொத்தி
போர்வையுள் கிடக்கும் பெட்டிப்
பாம்பெனச்
சுருண்டு மடங்கிச் சொல்லுக்கு இருமுறை
லொக்கு லொக்கென இருமிக் கிடக்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே.

வேதனை ஒன்றுதான். இரண்டிலும் எழிலுக்குப் பஞ்சமில்லை. அன்று நாரை விடுதூது; இன்று தபால் விடுதூது -

நகைச்சுவை எழில் :

இந்த எழிலுக்கு மதுரையில் முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியும் மதுரையைப் பற்றிய பின்னர் ஒரு நிகழ்ச்சியையும் உங்கள் முன்னே வைக்க விரும்புகின்றேன்.

இரட்டைப் புலவர்கள் மதுரைக்கு வந்தனர். பொற்றாமரையில் குளித்தனர். அப்பொழுது குருடராகிய புலவர் தம் உடையை நீரில் தோய்த்துத் தப்பினர். அலசிக் கொண்டிருந்த போது ஆடையைத் தண்ணீர் அடித்துக்கொண்டு சென்றது. முடமாய் இருந்த புலவர் கரைமேல் விற்றிருந்தார். இந்தக் காட்சியைப் பார்த்துப் பாடினர்.

அப்பிலே தோய்த்திட்டு அடுத்தத்தடுத்து நாமதனைத்
தப்பினல் நம்மையது தப்பாதோ -

அதற்குப் பதிலாகக் குருடர் பாடினர்:

இக் கலிங்கம் போனலென். இப்புவியில் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் தாளிருக்கச் சொல்.

ஆடைபோன பரிதவிப்பில்கூட நகைச் சுவையை மறக்கவில்லை. நகைச் சுவையின் எழிலைக் காண்கின்ளும். இது முன்னைய நிகழ்ச்சி.

அண்மையில் வாழ்ந்த வெண்பாப்புலிக் கவிராயர் என்பவர் எட்டையபுரம் போனர். அங்கிருந்த பெண்களின் பற்கள் முத்துப் போன்று அழகாக இருந்தன. அந்த முத்தைக் கூறும் பொழுது மதுரையை வைத்து வர்ணிக்கின்ருர்.

தூது மதுரை துவரை கடை யிடை முன்
ஓதுகின்ற மூன்றெழுத்தை ஒக்குமே - நீதி
செகராச ராசர்கள் தம் சிங்கே (று) இளசை
நகரார் இளையார் நகை.

தூது என்பதின் கடை எழுந்து து,
மதுரையின் இடை எழுத்து து
துவரையின் முதல் எழுத்து து
ஆக மூன்று 'து' : முத்தானது.

ஆண்சிங்கம் போன்ற பேரரசர்கள் வாழ்கின்ற எட்டயபுரத்தில் வசிக்கும் இளம் பெண்கள் நகை, அதாவது பல். ஏன் இளம் பெண்களைக் குறிப்பிட்டார் என்பதற்கு விளக்கம் தேவை இருக்காது, வயதானவர்கள் எல்லாம் கிழவிகள் என்று சொல்லி அவர்கள் கோபத்திற்கு ஆளாவது அறிவுடையாகுமா?

இவ்வளவு எழில்கள் கொண்ட தமிழை அமிழ்தென்பதோ? எழில் என்பதோ? ☆

---

## ஒலிச் செல்வம்

தமிழோடு பழகின காதுக்குச் சுகத்தைத் தரவேண்டும், தமிழ் ஒலி, பேச்சினலும் சரி, எழுத்திலானலும் சரி, ஒலியினல் ஏற்படும் இன்பத்தை அசட்டை செய்வது தவறு. ..........

சிற்பி தன் உளிக்கும் கல்லுக்கும் அடிமைப்பட்டிருக்கிருன். கவிஞனே சொல்லுக்கு அடிமைப்பட்டு நிற்கிருன். இசைவாணன் மாத்திரம் பரிபூரண சுதந்திரத்தோடு சஞ்சாரம் செய்கிருன். நாதக் குதிரை மேலேறி அவன் ஒரு தட்டுத் தட்டுகிருன்; அது நம்மை விஸ்வ வெளிக்கே இழுத்துச் சென்றுவிடுகிறது.

கவிதைக்கும் கிட்டத்தட்ட அந்தச் சுதந்திரம் கிடைக்கிறது...... இப்படி வளமான ஒலிச் செல்வத்துக்கெல்லாம் வாரிசாக இருக்கிருன் தமிழன்.

— மேதகு ஜஸ்டிஸ் மகராசன்
(ஒலிச் செல்வம் – பக் 1-9)



# திருக்குறள் ஒரு பொதுமறை

திரு. கோ. வன்மீகநாதன்

திருக்குறளை இதுகாறும் பெரும்பாலோர் ஓர் அறநெறி, நன்னெறி நூலென்றே கருதி வந்திருக்கிறார்கள் என்று கூறினால் யாரும் மறுக்க மாட்டார்கள். அதை ஒரு சமய நூலென்று எவரும் இதுகாறும் கருதவில்லை என்று கூறினாலும் எவரும் மறுக்க மாட்டார்கள். அதுமட்டு மன்று, கிறிஸ்தவர்களுக்குப் பைபிள் போலவும், இஸ்லாமியர்களுக்குக் குர்ரான் போலவும் திருக்குறள் சநாதன தருமம் (தவறாக ஹிந்து மதம்) என்ற சமயத்தைச் சார்ந்த தமிழர்களுக்கு உரிய சமய நூல் என்றால் இக்கருத்தை ஏற்பதற்கு எவரும் முன்வர மாட்டார்கள். உலகம் உருண்டை வடிவமானது என்ற கருத்தை ஏற்க மக்கள் மறுத்ததால் அது உருண்டை வடிவமுடையதா யில்லாமற் போய்விடாதது போலத் திருக்குறளும் சமய நூலாக இல்லாமற் போய்விடாது.

சநாதன தருமத்தின் கோட்பாடுகள் யாவை? அனந்தம் என்று தோன்றும். ஆனால் உண்மையில் மூன்றே. 'ஒன்றே கடவுள்' என்பது முதலாவது. 'வினை, வினைப்பயன்' என்பது இரண்டாவது. 'மறுபிறப்பு' என்பது மூன்றாவது.

திருக்குறளின் முதற்பதிகம் இறைவனை ஒன்பது பெயர்களால் குறிப்பிடுகின்றது. இங்குச் சுட்டப்படும் இறைவன் நிர்க்குணப் பிரம்மமாகிய பரம்பொருள் அன்றி வேறல்ல. இத்தகைய இறைவனைப் பொறிவாயில் ஐந்து உடையவனாகவும், அதாவது, நம்மைப்போலக் கண், காது, மூக்கு, நாக்கு, தோல் உடையவனாகப் பாவித்து அவற்றைத் தானே அவித்துக்கொண்டான் என்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது. அதற்கு மாறாக 'ஐந்தவித்தான் ஆற்றல்......' என்று தொடங்கும் குறளில் வரும் ஐந்தவித்தானாகிய துறவியின் ஐந்து பொறிகளை அவித்தவனாகிய, அவிப்பதற்குத் துணையாய் நின்ற இறைவன் என்று பொருள்கொள்வதே நன்று.

திருவள்ளுவர் தம் திருக்குறளில் 16 குறள்களில் வினையைப் பற்றியும் வினைப் பயனைப்பற்றியும் பேசுகிறார். அவையாவன, 5, 33, 63, 201, 207, 209, 210, 244, 321, 335, 367, 439, 455, 456, 904, 909 ஆம் குறள்களாகும்.

மறுபிறப்பைப் பற்றி 12 குறள்களில் பேசுகிறார். அவையாவன 10, 62, 107, 345, 349, 351, 357, 358, 361, 362, 365, 1002 ஆம் குறள்களாகும்.

சநாதன தருமத்தின் கோட்பாடுகளாக இம்மூன்றையே அடிக்கல்லாகக் கொண்டு திருக்குறள் அமைக்கப்பட்டிருக்கின்றதென்று கூறவும் வேண்டுமோ!

திருக்குறள்களுக்குப் பொருள் காணுங் கால், திருக்குறளானது எக்காலத்திற்கும் எந்நாட்டவருக்கும் பொருத்தமான, உவந்த நூல் என்ற கருத்தின் அடிப்படையிலேதான் பொருள் காண வேண்டும். இக் கருத்திற்கு முரண்பாடான பொருள்கள் கூறுவது முறைமையன்று. மற்றொன்றையும் மனத்திற் கொள்ள வேண்டும், 1330 குறள்களில் ஒன்றை எடுத்துக்கொண்டு அதை உறுதியான ஒன்றாகவும் மற்றவற்றோடு தொடர்பு இல்லதாகவும் கருதிப் பொருள் கொள்ளக் கூடாது. மூன்றாவதாக எத்தகைய உரையாசிரியராயினும், அவர் காலதேச வர்த்தமானத்தால் பீடிக்கப்பட்டவர் என்பதை

மறக்கக் கூடாது. எடுத்துக்காட்டாக, புதல்வரைப் பெறுதல் என்று ஒரு பதிகத் திற்குத் தலைப்பாகக் கொண்டு, புதல்வர் என்ற சொல் பெண்மக்களை ஒதுக்குகின்றது என்று பொருள் கொள்வது தவறு. ''சான்றோனெனக் கேட்டதாய்'' என்ற சொற்றொடரில் வரும் தாய் கல்வி கேள்வி அறிவில்லாதவள் ஆதலால் அவள் பிறர் சொல்லித்தான் அறியவேண்டு மென்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது. இவ் வண்ணமே 'அறத்தாறு இது என வேண்டா .........'' என்ற குறளுக்கும் ''அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்.......'' என்ற குறளுக்கும் பரிமேலழகர் கொள்ளும் பொருள் ஏற்கத்தக்கது அன்று மேலும் 'புதல்வரைப் பெறுதல்' என்ற பதிகத்தின் தலைப்பிற்குப் பொருள் கூறுமிடத்து, ''இரு பிறப்பாள ராகிய மூவர்க்கும்'' என்று தொடங்கும் பொருள் நகைக்கும் தகைமைய தாகும். இவ்வுரை என்ன சொல்கிற தென்றால் நான்காம் வருணத்தவராகிய வேளாளருக்கு இப்பதிகம் எழுதப்படவில்லை என்கிறது. ஆகையால் தமிழ் நாட்டின் ஜனத் தொகையில் 96 சதவிகிதமாகிய வேளாளர் புதல்வரைப் பெற வேண்டிய தேவையில்லை என்று வள்ளுவர் கூறுவதாக அமையும். வள்ளுவர் இரு பிறப்பாளராகிய மூன்று வருணத்தில் ஒரு வருணத்தவர் என்று நான் கேட்டதில்லை. தமக்கே பிள்ளை குட்டி தேவையிலலை என்று எழுதிவிட்டார் என்று கருதவேண்டும் நாம் பரிமேலழகரின் உரையை ஏற்றால்.

நிற்க, ''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்......'' என்ற குறளில் வரும் ஒழுக்க நெறி யாது, எங்குக் கூறப்பட்டிருக்கிற தென்று அந்நெறி வழி நிற்க விரும்பும் ஒருவன் கேட்டால், என்ன விடையளிக்க இயலும், அந்நெறியையே திருவள்ளுவர் அடுத்து வரும் 1325 குறள் களில் கூறுகின்றார் என்று கொள்ளாவிடில்! அதேபோல ''அறத்தாறு'', ''அறத்தி னூஉங்கு''..........''இழுக்கா இயன்றது அறம்'' என்றும் மற்ற இடங்களிலும் இதே போலக் கூறப்படும் ''அறம்'' யாது என்று கேட்டால் திருவள்ளுவர் அறத்துப்பாலின் 37 அதிகாரங்களில் கூறிச்சென்றதே அவ்வறம் என்றே பொருள் கொள்ள வேண்டு மென்று கூறவும் வேண்டுமோ?

திருக்குறளின் அமைப்பை ஆராய்வோம். முதல் நான்கு பதிகங்களும் பாயிரமாகும். அவை ஒவ்வொன்றும் கடவுள் வாழ்த்தே என்று கூறின் மிகையாகாது – அடுத்து வரும் 5, 6, 7 ஆம் பதிகங்கள் திருக்குறளைக் கற்க, அதன்வழி நிற்கத் தகுதியுடையோர், கடமைப் பட்டவர் யாரெனக் கூறுகின்றன. கணவன், மனைவி, மக்கள், மூவர் அடங்கிய குடும்பம் ஒவ்வொன்றும் திருக்குறளைப் படிக்க, பயில உரிமை உள்ளவர்கள், அதிகாரிகள்.

திருக்குறள் 'அன்புடைமை' என்ற எட்டாம் பதிகத்தி லிருந்தே தொடங்கு கின்றது. வாழ்க்கை என்ற வண்டிக்கு இரு சக்கரங்கள் இல்லற இயலும் துறவற இயலு மாகும். அன்பு ஒரு சக்கரத்தின் குடம், விருந்தோம்பல் முதலாக ஈகை ஈறாகப் பதினாறு பதிகங்களும் ஆரங்கள். புகழ் ஆரங்களைப் பிணைக்கும் வட்டம். அருளுடைமை துறவற இயலின் குடம், புலால் மறுத்தல் முதல் மெய்யுணர்தல் ஈறாக ஆரங்கள், அவாவறுத்தல் வட்டம்.

திருக்குறளைப் பற்றி நிலவும் ஒரு மிகத் தவறான கருத்து, அது புருஷார்த்தங்களாகிய, மனிதனாகப் பிறந்ததின் லக்ஷ்யங்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றுள் முதல் மூன்றை மட்டும் கூறி, நான்காவதாகிய வீட்டைப்பற்றி யாதும் கூறாமல் விட்டுவிட்டது என்ற கருத்தாகும். இக் கருத்தை எண்ணிச் சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை. கற்றவரும் கல்லாதவரும் நூற்றாண்டு நூற்றாண்டுகளாக இக்கருத்தைக் கூறி வருவதை நினைத்தால் அவர்களைப்பற்றி என்ன எண்ணுவதென்று கூற நா கூசுகிறது. இத்தவறான கருத்திற்குக்காரணம் யாதெனின் அது இவர்கள் ''வீடு'' என்பதைப்பற்றி

கொண்டிருக்கும் கருத்தே ஆகும். வீடு வெட்ட வெளியில், ஆகாசத்தில் உள்ள ஒரு இடம், அங்கே காமதேனுவும் கற்பக விருக்ஷமும் இருக்கின்றன. அப்சரரும் அரம்பையர்களும் வாழ்கின்றார்கள், மனிதன் பூவுலகத்தில் துய்க்காமல் இழந்த இன்பங்கள் எல்லாவற்றையும், பூவுலகம் அளிக்க இயலாத இன்பங்கள் எல்லாவற்றையும் வட்டியும் முதலுமாகத் துய்க்க வாய்ப்பளிக்கும் தேசம் என்று இத்தகைய மக்கள் எண்ணுகிறார்கள், மனிதன் இறந்த பின் செல்லும் ஒரு நாடு என்று எண்ணுகிறார்கள். அத்தகைய நாட்டைத் திருவள்ளுவர் சொல்லாமல் விட்டு விட்டார் என்கிறார்கள். ''மெய்யே! நின் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்'' என்கிறார் மாணிக்கவாசகர். வீடு உற்றும், பூவுலகில் மேலும் பற்பல ஆண்டுகள் வாழ்ந்தார் என்பதை உணரவில்லை இம்மக்கள்.

''ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்''

என்று வள்ளுவர் சொன்னால் என்ன,

அன்றி நம்மாழ்வார்,

'நன்றாய் ஞானங் கடந்து போய்,
நல்லிந் திரிய மெல்லாம் நீத்து,
ஒன்றாகக் கிடந்தவரும் பெரும்பாழு
வப்பிலதனை உணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக்
களைந்து பசையற்றால்
அன்றே, அப்போதே வீடும்
அதுவே வீடு வீடாமே''.

என்று கதறினால் என்ன, திருவள்ளுவர்

**நான்கும்.........**

அறன் அறிந் தேம் ஆன்ற
பொருள் அறிந் தேம் இன்பின்
திறன்அறிந் தேம் வீடு
தெளிந்தேம் — மறன்எறிந்த
வாளார் நெடுமாற
வள்ளுவனார் தம்வாயால்
கேளா தனவெல்லாம்
கேட்டு

— திருவள்ளுவமாலை

வீட்டைப்பற்றி யாதும் கூறவில்லை என்று சாதிக்கும் பேதையர் தம் கருத்தைக் கைவிட மாட்டார்கள். அவா அறுத்தலும் வீடு எய்துதலும் வெவ்வேறு செயல்கள் அன்று என உணர மாட்டார்கள். வீடு இங்கே, இன்றே, இப்பொழுதே எய்தும் நிலை என்று உணரார்கள்.

திருக்குறள் ஓர் ஆறு, வழி, சாலை. அதன் ஒரு பகுதி இல்லறவியல். இப்பகுதியில் மட்டும் நடந்து சென்றவன் பாதிவழி தான் சென்றவனாவான். அவன் அச்சாலையில் அடுத்த பகுதியையும் கடந்து சென்று அதன் எல்லையை அடைந்தாலன்றிப் பயனில்லை. ஏனெனில் அவன் நாடிச்செல்லும் நாடு பேரா இயற்கை என்ற வீடு. வீட்டை எய்துவதற்கு வழிகாட்டியே, ஆற்றுப்படுத்தும், நூலே திருக்குறள்.

அறத்துப் பாலுக்கும் பொருட்பாலுக்கும் இடையே ஊழியலைப்பற்றிச் சில சொற்கள் கூறி இக்கட்டுரையை முடிப்பேன். இது இரண்டு பால்களையும் இணைக்கும் ஒரு பாலம். வினை என்பது மூன்று பிரிவுகளைக் கொண்டது. சஞ்சிதம் அல்லது தொல்வினை, ஆகாமியம் அல்லது மேல்வினை, பிராரப்தம் அல்லது ஊழ்வினை. இவ்வியலின் தலைப்பை ஆழ்ந்து சிந்தித்தால் இப்பதிகம் பிராரப்த மாகிய ஊழ்வினையைப் பற்றிக் கூறுகிற தென்பது விளங்கும். இது விளங்கவே, அப்பதிகத்தில் அடங்கிய குறள்கள் பத்தும் மிக்கப் பொருட் பொழிந்தவை என்பது புலப்படும்.

இவ்வளவும் படித்த பின் திருக்குறள் ஒரு சமயநூல், பைபிளுக்கும் குர்ரானுக்கும் ஒப்ப அமைந்த நூல், இகபர வாழ்க்கைக்கு நெறி புகட்டும் நூல் என்ற முடிவுக்கே படிப்போரை வரவைக்கும் என்பதில் ஐயமில்லை.

இக்கருத்தை விரிவாக உரைக்கும்
''திருக்குறள் ஒரு பொது மறை''
என்ற நூல் திருப்பனந்தாள் (PIN 612 504) ஸ்ரீ காசிமடத்தின் மானேஜரிடம் கிடைக்கும்.

மற்றொரு நூல் 'Taking a Squint at Religion' என்பதாகும். இது பத்மபூஷண் ஸ்ரீ N. ராமசாமி அய்யர் அறநிலையங்களின் (Charities Society) செயலரிடம் கிடைக்கும். முகவரி P.B. 349. திருச்சிராப்பள்ளி 620002.

★

# வாழும் வழி



ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயீல்

பழந்தமிழ் இலக்கியங்களுக்கு, குறிப்பாக சங்க இலக்கியங்களுக்கு, ஒரு தனிச் சிறப்பு உண்டு. அதுதான் மிக உன்னத மான கருத்துக்களை, சிறிய சொற்களாலான சூத்திர வடிவில் கொடுத்துவிடுவது.

இப்படிக் கூறும்பொழுதே மூன்று தன்மைகள் அவற்றில் இடம் பெற்று விடுவதைக் காண்கிறோம். ஒன்று, கருத்து உன்னதமாக இருத்தல்; இரண்டு, அந்தக் கருத்தை வெளிப்படுத்துவதற்கு எளிய சொற்களை ஆள்தல்; மூன்று, சொல்லப் பெற்ற கருத்தின் அமைப்பு சூத்திர வடிவமாதல்.

கருத்து உன்னதமாக இருக்கவேண்டு மென்றால் அதை வெளிப்படுத்திய மாத்திரத் திலேயே படிப்பவர், கேட்பவர் உள்ளத் திலும், உணர்விலும் ஓர் உயர்வையும், சிறப்பையும் உண்டுபண்ணுவது இன்றியமை யாததாகும். இந்த உயர்வும், சிறப்பும் அவ்வப்பொழுது தோன்றி மறைவதாக இல்லாமல் என்றும் நிரந்தரமாக நிலை பெறுவனவாக இருத்தல் வேண்டும். அப்படி யிருந்தால்தான் கூறப்பெற்ற கருத்து படிப் பவர்களும், கேட்பவர்களும், எக்காலத் தவராயிருப்பினும், எந்நாட்டவராயிருப்பி னும் அவர்க்குக் குறிக்கோளாகவும், வாழ்க்கை யின் இலக்கியமாகவும் அது அமைய முடியும்.

கருத்துக்கு இத்தகைய உன்னதத் தன்மை அமைவது எப்படிச் சாத்தியமா கிறது என்பது இயற்கையாகவே எழக்கூடிய வினாவாகும். எந்தக் கருத்தையும் வெளியிடு பவன் மனிதன்தான்; அவனே மறையக் கூடியவன்; அவன் வெளியிடும் கருத்தும் அத்தகையதாக இருப்பின் அதுவும் அவனோடு அழிந்துவிடும். ஆனால், என்றும் அழியாமல் அமரத்துவம் பெற்றுவிடுகிற கருத்துக்களைச் சில மனிதர்கள் நமக்கு விட்டுச் சென்றிருப்பதை நாம் அனைவரும் அறி வோம். அப்படியானால், இத்தகைய கருத் துக்களை அவர்கள் விட்டுச் செல்வதற்கு ஏதுவாக இருப்பது எது என்பது அடுத்த வினாவாகும்.

ஒரு மனிதனை நாம் காணும் பொழுதும், குறிப்பிடும்பொழுதும், ஒரு குறிப்பிட்ட கூற்றை மாத்திரம் நாம் மனத்தில் கொள்வ தில்லை. 'நான்', 'நீ', 'அவன்', என்று குறிப் பிடும் பொழுது ஒரு மனித உடலை மாத்திரம் நாம் குறிப்பிடுவதில்லை; அதை இயக்கு விக்கும் ஒரு சக்தியையே விசேஷமாகக் குறிப்பிடுகிறோம். காரணமென்னவென்றால், அந்தச் சக்தி இல்லையென்றால், மனிதன் பஞ்சபூதங்களாலான ஒரு பிண்டமாகி அழி வுக்கும், மாற்றத்துக்கும் ஆளாகிறான். இந்தச் சக்தியைத் தான் சற்று சாதாரண நிலையில் உயிர் என்றும், சற்று மாறிய நிலை யில் ஆன்மா என்றும் கூறுகிறோம். இந்தச் சக்தியோ இந்திரியங்களால் நுகரக் கூடிய தல்ல; அதே சமயத்தில், இது இயங்கு வதற்கு ஒரு அமைப்பும் தேவைப்படுகிறது, எனவே, மனிதன் ஒருவன் குறிப்பிடப் பெறும் பொழுது அவனுடைய உடலன்றி இந்தச் சக்தியும் சேர்த்துத்தான் குறிப்பிடப் பெறுகிறது.

உடல் அழியக்கூடியதாயினும் அதனை இயக்கும் ஆன்மா அழியாதது என்பது ஒரு தத்துவக் கருத்து மாத்திரமல்லாமல், கூர்ந்து சிந்திப்பவர்களுடைய அனுபவமும் கூட.

இந்த ஆன்மா மனித உடலில் இணைந்து இயங்கும் பொழுது தன்னுடைய அழியாத் தன்மையைச் சிற்சில துறைகளில் அவன்

மூலமாக வெளிப்படுத்திவிடுகிறது. அத்தகைய துறைகளில் ஒன்று அவனுடைய உள்ளம், உணர்வு, சிந்தனை; அவற்றில் இருந்து பிறக்கும் அவனுடைய கருத்துக்கள் அழிவற்றதாகிய ஆன்மாவுக்கு வரையறையோ, எல்லையோ இல்லை. தற்காலிகமாக தான் இயக்கும் உடலோடு அது இணைந்திருந்த போதிலும் அந்த உடலில் அது சிறைப்படுத்தப் பெறுவதில்லை. ஒரு உடலோடு இணைந்து இயங்கிக் கொண்டிருப்பதைப் போலவே, தோன்றும் அனைத்தோடும் அதேசமயத்தில் அது இணைந்து இயங்கிக் கொண்டிருக்கிறது. எனவே இந்த ஆன்மாவின் எதிரொலி அண்ட சராசரங்கள் அனைத்திலும் கேட்கிறது. இந்த அடிப்படையிலிருந்து பிறப்பது என்னவென்றால் சில மனிதர்களுடைய சிந்தனையும், அந்தச் சிந்தனையிலிருந்து பிறக்கும் கருத்தும் எக்காலத்துக்கும், எவ்விடத்துக்கும் பொருந்தும் படியாக அமைந்துவிடுவதுதான். எந்தக் கருத்து இப்படி அமைகிறதோ, அந்தக் கருத்துத்தான் உன்னதமான கருத்து.

இத்தகைய கருத்து எளிய சொற்களால் வெளியிடப்பெற வேண்டுமென்பதும் எளிதாகப் புரிந்துகொள்ளக் கூடியதே. எப்பொழுது ஒரு கருத்து தெளிவாக இருக்கிறதோ, அப்பொழுது அதனை உணர்த்தும் சொல்லும் எளிமையாகிவிடுகிறது. ஏனெனில், தெளிவின் எதிரொலிதான் எளிமை. தோன்றும் கருத்து குழப்பமாக இருக்குமாயின் அதை வெளிப்படுத்தும் சொல்லும் எளிமையற்றுப் போகும். குழப்பத்தை மறைக்கும் முயற்சியில் எளிமையற்ற சொற்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால் உன்னதமான கருத்துக்கள் இயற்கையோடு ஒன்றிய கருத்துக்களாகவும், அதன் காரணமாகவே தெளிவான கருத்துக்களாவும் இருக்குமாதலால் அவற்றை வெளியிடும் சொற்களும் எளிமையாகவே இருக்கும்.

இத்தகைய கருத்துக்கள் சூத்திரவடிவில் இருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. மதிப்புமிக்க எதுவும் சிறியதாகவே இருக்கும்; பெருமையுள்ள எதுவும் அருமையாகவே இருக்கும். முற்காலத்தில் எந்தக் கருத்தும் பரவுவதற்கு இருந்த வழி ஒன்றேயொன்று தான்; ஒருவர் சொல்லி மற்றொருவர் அதைக்கேட்டு நினைவில் வைத்துக்கொண்டிருந்து இன்னொருவருக்குச் சொல்வது என்பதுதான் இந்த வழி. ஆகையால்தான் இந்தியநாட்டு வேதங்களுக்கே ஸ்ருதி, ஸ்மிருதி—அதாவது கேட்கப் பெற்றது, நினைவில் இருத்திக் கொள்ளப் பெற்றது என்று பெயர். 'எழுதாக்கிளவி' என்றும் தமிழில் சொல்கிறோம். மனிதனுடைய சரித்திரத்தில் இந்த எழுதும் முறை பின்னால் வந்தது. ஆனால் கருத்துக்களோ மனிதன் சிந்திக்கத்தொடங்கியதில் இருந்தே தோன்றியவை. ஆகவே அவை பரவுவதற்கு இந்த வழியே தவிர வேறு வழியில்லை.

இத்தகைய கருத்துக்கள் ஏதோ பழம் பெரும் தமிழ் மக்களிடையே மாத்திரம் தான் தோன்றி, அவை நம்முடைய இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கின்றன என்று சொல்லிவிட முடியாது; மனிதன் எங்கெல்லாம் வாழ்ந்தானோ அங்கெல்லாம் இவை தோன்றி, அவன் தன் கருத்தை வெளியிடுவதற்கு எந்தெந்த மொழியை ஆண்டானோ அந்தந்த மொழிகளில் எல்லாம் அது இடம் பெற்றிருக்க வேண்டும். நமக்குப் பழக்கமான நம் மொழியில் இருப்பவற்றைப் பற்றி நாம் பேசுவதனால் அத்தகைய கருத்துக்கள் வேறு மொழிகளில் இல்லையென்றாகி விடாது. அதற்குமாறாக ஒரு மொழிக்குமேல் தெரிந்த பலர் ஒவ்வொரு மொழியிலும் இத்தகைய கருத்துக்கள் இருப்பதையறிந்து, அவற்றில் ஒரு மொழியில் இருக்கும் கருத்துக்கும், இடத்தாலும், காலத்தாலும் வெகுதூரத்திலுள்ள இன்னொரு மொழியில் இருக்கும் கருத்துக்கும் இடையேயுள்ள அற்புதமான ஒற்றுமையைக்கண்டு விவரிக்க முடியாத வியப்பில் ஆழ்ந்திருக்கிறார்கள். ஆனால் ஆன்மாவைப்பற்றி நாம் இங்கே கண்ட கருத்தை நினைவில் இருத்திக்

சொண்டால் இத்தகைய வியப்புக்கு இடமேயில்லை என்பது தெளிவுபடும்.

இத்தகைய கருத்துக்களில் ஒன்று புறநானூற்றில் உள்ளது. அந்தப்பாடல் முழுவதையும் தெரிந்துகொள்ளாமல் அதன் முதலடியை மாத்திரம் தமிழர்கள் அனைவரும் பெருமையுடன் பறைசாற்றிக் கொண்டிருக்கிறோம்.

புறநானூற்றுப் பாடல்களைப் பாடிய புலவர்களில் ஒருவர் கணியன் பூங்குன்றனார் என்பவர். 'கணியன்' என்ற சொல்லுக்கு, 'சோதிடம் வல்லோன்' என்று பொருள். 'பூங்குன்றம்' என்பது ஒரு நகரின் பெயர். சாஸனங்களிலிருந்து இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மகிபாலன்பட்டியைத் தான் இது குறிக்கிறது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அப்படியானால், தொழிலாலும், இடத்தாலும் இவருக்கு இந்தப்பெயர் அமைந்துவிட்டது என்று சொல்லவேண்டும்.

இவரால் பாடப்பெற்றதாக புறநானூற்றில் 192ஆவது பாடலாக அமைந்திருப்பது,

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர் தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்,
இன்னாது என்றலும் இலமே; 'மின்னொடு
வானம் தண் துளி தலைஇ, ஆனாது
கல் பொருது இரங்கும் மல்லல் பேர் யாற்று
நீர் வழிப்படூஉம் புணைபோல், ஆர் உயிர்
முறை வழிப்படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே''.

என்பது.

இப்பாடலின் முதல் வரியைத்தான் தமிழனுடைய பரந்த மனப்பான்மையை பறைசாற்றிக் கொண்டிருக்கிறது என்று நாம் அனைவரும் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் இந்தப் பாடலின் முதல் வரி வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய ஒரு தத்துவ நெறியின் ஓர் அங்கமேயன்றித் தனிப்பட்ட ஒரு வாழ்வின் முறையன்று.

'ஊர்' என்ற தமிழ்ச் சொல்லுக்குப் பொதுவாக 'இடம்' என்ற பொருள் இருந்த போதிலும், அது மக்கள் சேர்ந்து வாழும் இடத்தையே குறிக்கிறது. என்றாலும் இந்தப் பாடலை பாடிய புலவர் இதனை இன்னும் சிறப்பான பொருளிலேயே ஆள்கிறார் என்று தான் கொள்ளவேண்டும், அதாவது, எல்லா ஊர்களையும் தாம் வசிக்கும் ஊராகவே அவர் கொள்கிறார் என்பதுதான் அது அப்படியில்லாவிட்டால் 'யாதும் ஊரே' என்ற சொற்களே பொருளற்றுப் போவதோடுமட்டுமல்லாமல், அடுத்து வரும் சொற்களோடு பொருந்தாமலும் போய் விடும்.

'கேண்மை' என்ற தமிழ்ச் சொல்லுக்கு 'நட்பு' 'உறவு' என்று பொருள். திவாகரம், 'கண்ணோட்டம்' என்ற பொருளையும் இதற்குக் கொடுக்கும். ஆகவே, 'கேளிர்' என்ற தமிழ்ச் சொல்லுக்கு, 'நண்பர்', 'சுற்றத்தார்' என்று பொருள். இவையிரண்டிலும் 'சுற்றத்தார்' என்ற பொருளே மிகுந்த நெருக்கமான உறவைக்

குறிப்பிடுவதனுல் அதுவே இங்குப் பொருத்த மாக அமையும். ஆகவே அனைவரும் நம் சுற்றத்தார் ஆகிறபடியால் அனைத்து ஊரும் நம்முடைய ஊரே என்று இப்புலவர் முதலடியில் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும்.

இங்கும் கூட ஒரு கொள்கையின் அடிப் படையில்தான் இக்கருத்தை அணுக வேண்டுமே தவிர, ஏதோ ஒரு குறுகிய செயல் அடிப்படையில் இதனை அணுகு வதற்கில்லை. அப்படி அணுகுவோமானுல் இது தமிழனுடைய உயர்வைக் காட்டு வதற்குப் பதிலாக, சிறுமையைக் காட்டிட வும் கூடும். 'யாதும் ஊரே' என்று சொல்லி விட்டு, நம் ஊரில் நாம் நடந்து கொள் வதைப் போல உலகில் எங்கே வேண்டு மானுலும் நடந்து கொள்ளலாம் என்று ஆகி விடக்கூடாது. இன்று ஒரு நாட்டுக் குடி மகன் இன்னெரு நாட்டின் எல்லைக்குள் நுழைவதென்ருல் கூட அந்த நாட்டின் அனுமதியின்றி நுழைய முடியாது.

இதுபோலவே உலகத்தார் அனைவரை யும் நாம் உறவினராகக் கருதியபோதிலும், அவர்கள் நம்மை அன்னியராகக் கருது வார்களாயின் விளைவு விபரீதமாகவே இருக்கும்.

எனவே இப்புலவரின் இந்தக் கருத்து மனித வாழ்வின் அடிப்படைக் கொள்கை களாக எவையெவை அமைய வேண்டு மென்று அவர் கருதினுர் என்பதையே காட்டுகிறது.

இந்தக் கருத்தும் இந்தப் பாடலின் பிற வரிகளில் காணப்படும் மற்ற கருத்துக் களோடு பிணைத்துப் பார்க்க வேண்டியதே தவிர, தனித்துப் பார்க்கக் கூடியதல்ல. ஏனெனில், இந்தப் பாடல் முழுவதிலும் காணப்படும் கருத்துக்கள் ஒன்ருேடொன்று பின்னிக்கொண்டிருப்பதோடல்லாமல்மனித வாழ்க்கையின் அடித்தளமாக எவையெவை இருக்க வேண்டுமென்று புலவர் கருதினுர் என்பதை ஒருங்கே எடுத்துக் காட்டுவதாக அமைந்திருக்கின்றன.

நாம் அனைவருமே வாழ்க்கையில் அனுபவிப்பவை சில உண்டு. நன்மை, தீமை நோய், சுகம், வளம், வறுமை, மகிழ்ச்சி, துக்கம். ஒரு விதத்தில் பார்க்கப் போனுல் மகிழ்ச்சி என்பது நமக்கு உண்டாகும் நன்மை, சுகம், வளம் ஆகியவற்றின் விளை வாகும். அதுபோலவே துன்பம் என்பதும் தீமை, நோய், வறுமை ஆகியவற்றின் விளை வாகும். ஒருவனுக்குக்கேடு வந்தவிடத்தும், நோய் வந்த விடத்தும், வறுமை வந்த விடத்தும் அவன் மகிழ்ச்சியோடிருப்பது என்பது இயலாத காரியம். அதுபோன்றே நன்மை வந்த விடத்தும், சுகமாக இருக்கும் பொழுதும், வளம் நிறைந்த காலத்தும் அவன் மகிழ்ச்சியோடு இருப்பானே தவிர துன்பப்படமாட்டான். இவ்விரண்டு அனுப வங்களும் இயற்கையானவையாகவே தோன்றுகின்றன.

இவை இயற்கையானவையாக இருந்த போதிலும் இவை நியாயமானவைதானு, இவைஅறிவுடைமைக்குப்பொருந்துபவையா என்று சிந்திப்பதும் அவசியமேயாகிறது.

வாழ்க்கையில் நமக்கு இன்னெரு அனுபவமும் உண்டு. ஒவ்வொருவருடைய ஒவ்வொரு செயலுக்கும் ஒரு பலன் உண்டு. நன்மை செய்தால் அதற்குப் பரிசும், தீமை செய்தால் அதற்குத் தண்டனையும் இறைவனிடத்து உண்டு என்று நம்முடைய சமயங்கள் போதிக்கின்றன. "Every action has a reaction" அதாவது ஒவ்வொரு செய லுக்கும் ஒரு எதிர்ச்செயல் உண்டு என்பது விஞ்ஞான நியதி. இப்படிப் பார்க்குமிடத்து நமக்கு நேரும் நன்மையும், நாம் அனுபவிக் கும் சுகமும், நாம் துய்க்கும் வளமும் யாரோ ஒருவர் கொடுத்து நமக்குக் கிடைப்பதல்ல.

நம்மாலே வரவழைத்துக் கொள்பவை அவை என்று எண்ணத் தோன்றும். அதாவது நம்முடைய சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றின் விளைவே இவை என்பது தான் அந்த எண்ணம். அதுபோன்றே தீமையும், நோயும், வறுமையும்.

இந்தக் கோணத்திலிருந்து காணும் பொழுது நன்மையுண்டான போது மகிழாமலும், தீமை வந்தபோது துக்கிக்காமலும், இரண்டு நிலைகளையும் சமமாகக் காண்பதே அறிவுடைமையாகத் தோன்றுகிறதல்லவா?

இதை வேறொரு கோணத்திலிருந்தும் அணுகலாம். நமக்கு நேரும் நன்மை நம்மால் வரவழைத்துக் கொண்டதல்லாமல் பிறரால் தரப்படுவதாயின், அந்த நன்மைக்காக மகிழ்வதிலும், அதுபோன்றே தீமை வந்தவிடத்தும் துக்கித்தலிலும் என்ன நியாயமிருக்கிறது? இரண்டுக்கும் நாம் பொறுப்பல்ல; அப்படியிருக்கும் பொழுது ஒன்று நேர்ந்தவிடத்து மகிழ்வதற்கும், மற்றொன்று நேர்ந்தவிடத்து துக்கிப்பதற்கும் அறிவுபூர்வமாக நியாயம் இல்லையல்லவா? இதைத்தான் புலவர்,

''தீதும் நன்றும் பிறர் தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன;
வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே;
முனிவின்,
இன்னாது என்றலும் இலமே;''

என்று பாடுகிறார்.

தர்க்கரீதியாக இன்னொன்றையும் புலவர் காண்கிறார். முன்னர்கண்ட அனைத்துக்கும் ஒரு முடிவு உண்டாகிறது. அதுதான் சாவு. மகிழ்ச்சிகரமான வாழ்க்கை நடத்துபவன் சாவை விரும்புவதில்லை. மாறாக துன்பத்திலேயே உழல்பவர்கள் தாங்கள் அனுபவிக்கும் அந்தத் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக சாவை விரும்பவும் கூடும்; அதற்குமாறாக எப்படியாயினும் வாழவேண்டுமென்று விரும்புகிறவர்கள் தாங்கள் அனுபவிக்கும் துன்பத்திலிருந்து தங்களுக்கு விடுதலை கிடைத்து மகிழ்ச்சியாக வாழவேண்டுமென்று விரும்புவார்களே தவிர தங்கள் துன்பத்திற்கு நிவாரணமாக சாவை வரவேற்கமாட்டார்கள். ஆனால் நன்மையையும், தீமையையும் சமமனநிலையில் இருந்து அனுபவிப்பவர்களுக்குச் சாவைப் பற்றிய கவலையே இல்லை. எனவே, அத்தகையவர்கள் தங்களுடைய பிறப்பும், வாழ்வும் எவ்வளவு இயற்கையானவையோ, அவ்வளவு இயற்கையானது சாவும் என்று எண்ணுவார்கள். எனவேதான் புலவர்,

''சாதலும் புதுவது அன்றே''

என்று கூறுகிறார்.

இங்கே, இக்கூற்றில் காணப்படும் 'புதுவது' என்ற சொல்லினுடைய அருமையைக் காண்பது பொருத்தமாக இருக்கும். 'புதுவது, என்ற சொல்லுக்கு, 'புதிது' என்றுதான் பொருள். 'புதிது' என்ற சொல்லே நூதனமானதைத்தான் குறிக்கும். புறநானூற்றுப் பாடல்கள் பாடப்பெற்ற காலத்தில் 'புதுவது' என்ற சொல் இந்தப் பொருளில்தான் ஆளப்பெற்றது.

இடைக்காடனர் என்ற புலவர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய போது,

''ஆனு ஈகை, அடு போர்,
அண்ணல்! நின்
யானையும் மலையின் தோன்றும்;
பெரும! நின்
தானையும் கடல் என முழங்கும்;
கூர் நுனை
வேலும் மின்னின் விளங்கும்;
உலகத்து
அரைசு தலை பனிக்கும் ஆற்றலை
ஆதலின்,

புரை தீர்ந்தன்று; அது புதுவதோ அன்றே

— (புறநானூறு–42)

என்று பாடுகிறார்.

இவ்வரிகளின் பொருள் என்னவென்றால் ''அமையாத வள்ளன்மையும், பகை வெல்லும் ஆற்றலுமுடைய அண்ணலே! உன் யானையும் மலைபோலத் தோன்றும்; பெரும! உன் படையும் கடல்போல விளங்கும்; கூரிய நுனியையுடைய உன் வேலும் மின்போல விட்டுவிட்டு விளங்கும்; இங்ஙனம் உலகத்தின்கண் பிறமன்னர்கள் நடுங்குமளவு நீ வலிமையுடையவனுதலால் எங்கும் குற்றங்கள் தீர்ந்தன. இது உனக்குப் புதியதும் அன்று'' என்பதாகும்.

மேற்குறிப்பிடப்பட்ட சாதனை மன்னனுக்குப் புதியதன்று என்று இடைக்காடனர் பாடுகிறார். அப்படியானல் அவனுடைய ஆட்சி தொடக்கத்திலிருந்து அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். இதுவன்றி இந்தக் கூற்றை வேறொரு கோணத்திலிருந்தும் காணலாம். அதாவது, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனுடைய சாதனை அவனல் நிகழ்த்தப்பெற்ற புதுமையொன்றும் அல்ல; அது அவனுடைய மரபினர்க்கே இயல்பாகத் தொன்றுதொட்டு வருவதாகும் என்பதுதான் அது.

அதே கருத்தில்தான் இங்கும் 'சாதலும் புதுவது அன்றே' என்ற வரியில் இடம் பெற்றிருக்கும் 'புதுவது' என்ற சொல் ஆளப்பெற்றிருக்கிறது என்று கொண்டால், சாவு என்பது யாரோ ஒருவருக்குப் புதுமையாக உண்டாவதல்ல; பிறந்த அனைவர்க்கும் பொதுவாகவே என்றும் உள்ளது என்று புலவர் எடுத்துக் காட்டுகிறார் என்று கொள்ளலாம்.

இதில் இன்னென்றையும் நோக்கலாம், ஒருவனுக்கு மகிழ்ச்சியையோ, துன்பத்தையோ தருவது அவனுடைய உணர்வு தான், கருவிலே உருவான கணத்தே சாவு நிச்சயமாகி விடுகிறது. ஒவ்வொருவனும் தன்னுடைய வாழ்நாளில் எத்தனையோபேர் சாவதைப் பார்க்கிறான், அதுபோன்று தானும் ஒரு நாள் சாக வேண்டுமென்பதும், அந்த நாள் எப்பொழுதென்று தெரிவதற்கில்லை என்பதும் அவனுக்குத் திண்ணமாகத் தெரியும். இந்த நோக்கில் சாவு என்பது தன்னோடும், தன் உணர்வினோடும். ஒன்றிவிட்ட ஒன்று அத்தகைய மனநிலையில் ஒருவனுடைய வாழ்வு எப்படி அமையும் என்பதை விளக்கத் தேவையில்லை.

இவையெல்லாவற்றிற்கும் மேலாக புலவர் வேறொன்றையும் சொல்கிறார். அது தான்,

''..................மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும்
இலமே''

என்பது.

இதன் பொருள் என்னவென்றால், ''நன்மையால் மிக்கவரை மதிக்கவும் மாட்டோம்; சிறியோரைப் பழித்தல் அம் மதித்தலினும் செய்யோம்'' என்பதாகும்.

இங்குக் காணப்படும் 'மாட்சி' என்ற சொல்லுக்கு 'மகிமை', 'விளக்கம்', 'அழகு', 'இயல்பு' என்ற பொருள்கள் உண்டு. மகிமை, அழகு, இயல்பு என்ற மூன்று பொருள்களுமே இங்குப் பொருந்தும், இந்த மாட்சிமிக்கவரை வியப்பதும் இல்லை; அதில் குறைந்தோரை இகழ்தல் அதனினும் இல்லை என்பது புலவருடைய வாக்கு. இந்த வாழ்க்கை முறையினல் என்ன விளைகிறது? இதைக் காண்பதற்கு 'வியத்தல்' என்ற சொல்லின் பொருளை நோக்க வேண்டும். இந்தச் சொல்லுக்கு, 'அதிசயப்படல்', 'துதித்தல்', 'நன்கு மதித்தல், 'பாராட்டல்', 'புகழ்தல்' என்ற பொருள்கள் உண்டு.

மாட்சியில் பெரியோரை இப்படிச் செய்வதின் காரணமாக அப்படிச்செய்பவ னுக்கு என்ன பலன் உண்டாகிறது? உண்மையில் பார்க்கப்போனால் நன்மைக் குப்பதிலாகத் தீமையே உண்டாகிறது. வியப்பிலே அடங்கியிருப்பது எதைக்கண்டு வியப்படைகிறோமோ, அது அசாதாரண மானது என்ற உணர்வு. ஒன்று அசாதா ரணமாக இருந்தால் அது நமக்கு அப்பாற் பட்டது என்றாகிவிடும். அப்படி ஆகி விட்டால் அதனால் நாம் பலனடையப் போவதில்லை.

புலவர் இதோடு நின்றுவிடாமல் 'சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' என்று வேறு கூறிவிடுகிறார். யாரையும் இகழ்தல் என்பதே மனிதனுடைய பெருந் தன்மைக்கு அப்பாற்பட்டது. இதன் காரணமாக நம்முடைய கருணை உணர்வு குறைகிறது; அகந்தை உயர்கிறது; மற்றவர் களுடைய மனம் புண்படுகிறது. ஆகவே தான் புலவர் மாட்சியில் பெரியோரை வியக்க மாட்டோம். அப்படித் தவறி வியந்துவிட்டாலும் சிறியோரை எக்காலத் தும் இகழமாட்டோம் என்று கூறுகிறார். மாட்சியில் பெரியோரை வியத்தலால் உண்டாகும் தீமையைவிட சிறியோரை இகழ்தலால் உண்டாகும் தீமை பெரிது என்பது தெளிவு.

புலவர் தம்முடைய இந்தக் கொள் கைக்குக் காட்டும் காரணமோ வேறு,

''மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப்
பெய்தலான் அமையாது கல்லையலைத்து
ஒலிக்கும் வளவிய பேர்யாற்று நீரின்
வழியே போகும் தெப்பம்போல
அரிய உயிர் ஊழின் வழியே
படும் என்பது நன்மை கூறுபாடு
அறிவோர் கூறிய நூலாலே தெளிந்தது
தான்' என்பதுதான் அது,

உயிரானது முறைவழிப்படுகிறது; எதைப்போலவென்றால், பேர்யாற்று நீரில் செல்லும் தெப்பம்போல; இதைத் 'திறவோர் காட்சியின் தெளிந்தனம்' என்று புலவர் கூறுகிறார். புலவர் ஆண்டிருக்கும் 'முறை' என்ற சொல்லுக்கு 'ஊழ்' என்று பழைய உரைகள் கூறுகின்றன. புறநானூற்றுப்பாடல் கள் தோன்றிய காலத்தை நோக்குமிடத்து இந்தப் பொருள் பொருந்தாதது என்று சொல்வதற்கில்லை. ஆனால் தம்முடைய கூற்றுக்கு அவர் காட்டும் ஆதாரமோ 'திறவோர் காட்சி'-அதாவது நன்மை கூறு பாடு அறிவோர் கூறிய நூல்', அத்தகைய நூல்களில் இருந்து எல்லா உயிர்களுமே ஊழின்-வழிப்படும் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டோமாதலின், 'மாட்சி யில் பெரியோரை வியத்தலும் இலம்' சிறியோரை இகழ்தல் அதனினும் இலம்; என்று புலவர் பாடுகிறார்.

'முறை' என்றசொல்லுக்குஅவரவர்க்குப் பொருந்துகிற பொருளைக் கொடுத்து வெவ்வேறான நம்பிக்கை உள்ளவர்கள் இந்தக் கருத்தின் பொருளை உணர்ந்து கொள்ளலாம். இங்கே விளக்கத் தேவை யில்லை.

என்றாலும், புலவர் காட்டும் உவமை அவருடைய கருத்தின் ஆழத்தை நன்கு உணர்த்துகிறது. ஆருயிர் முறை வழிப்படும் என்பது எதுபோல இருக்கிறதென்றால், பேர்யாற்று நீர் வழிப்படும் புணைபோல இருக்கிறது. இந்தப் பேர்யாற்று நீரோ மின்னலுடனே மழை பெய்து கற்களை யெல்லாம் அடித்துக் கொண்டு போகிற வேகமான நீரோட்டத்தைக் கொண்ட பேர்யாறு, அத்தகைய நீரோட்டத்தில் அகப் பட்ட புணைக்கு அந்த நீரோட்டத்தின் வழியே அடித்துச் செல்லப் படுவதைத் தவிர வேறு என்ன வழியிருக்கிறது?

எனவே, கணியன் பூங்குன்றனாருடைய கருத்தினை, இந்தப்பாடல் முழுவதையும் மனத்திற்கொண்டுதான் நிதானிக்க வேண்டும் என்பது தெளிவு. ★



# ஐங்கணைக் காதல்

அ. வெ. சுப்பிரமணியன், I.R.A.S.

ஆண்டாள் திருமாலின்மீது கொண்ட காதலை மனிதனால் அளவிட முடியாது. ஆண்டவனையே கணவனாக அடைய வேண்டும் என்று பேரார்வம் கொண்ட நாச்சியார்,

மானிடவர்க்கென்று பேச்சுப் படில்
வாழகில்லேன், கண்டாய் !

என்று பேசினாள். இறுதியில் அரங்கனைத் தன் கொழுநனாக அடைந்தாள் என்பதை அன்பருலகம் நன்கு அறியும். ஆயின் ஏதோ ஒரு வகையில் அவளது காதல் முழுவடிவம் பெற்ற ஒன்று என்று காட்ட முடியுமானால் அவளது காதல் என்றும் புயல்காற்றினை ஓரளவு அளந்துவிட்டோம் என்று கூறிக் கொள்ளலாம்.

மனிதர் உள்ளத்தில் காதலைத் தூண்டி விடும் தெய்வம் மன்மதன். இவன் கரும்பு வில்லை வளைத்துத் தன் ஐந்து அம்புகளில் ஏதாவது ஒன்றை ஓர் ஆண் அல்லது பெண்ணின்மேல் எய்துவிட்டால் போதும் ! அந்த அம்பு பட்டவருக்குக் காதல் தோன்றி விடும். இந்த ஐந்து கணைகள் இரும்பால் செய்யப்பட்டவை அன்று : இவை மலர்க் கணைகள். தாமரையும் மாம்பூவும் அசோகின் மலரும் முல்லையும் நீலோற்பலமுமே இக்கணைகளாம்.

இவ்வைந்து கணைகளில் ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு விளைவுகள் உண்டு. இவை எய்யப்படுபவரின் உடல், உள்ளத்தில் இவற்றால் ஏற்படும் மாறுபாடுகளை இரத்தினச் சுருக்கம் என்ற சிறு இலக்கண நூல் பிரித்துக் கூறும் :

நினைக்குமரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணர்வு நீக்குமசோகு—வனத்
திலுறு
முல்லை கிடைகாட்டும் மாதோ முழு
நீலம்
கொல்லும் மதனம்பின் குணம்.

இந்நூலை ஆக்கியவர் புகழேந்திப் புலவர் என்று சொல்லப்படுகிறது. கவிதை மரபு பற்றிய சிற்சில செய்திகளைச் சுருக்கித்தருவது இந்நூலின் நோக்கம். இந்த நூற்பாவின் பொருள் : அரவிந்தம் (தாமரை) எய்யப் படுவோரின் உள்ளத்தில் நினைவினைத் தூண்டும் ; மாம்பூ உடலெங்கும் பசலை படரச்செய்யும் ; அசோக மலர் அனைத் துணர்வுகளையும் நீக்கி ஜடப்பொருள் போலச் செய்துவிடும். (அனைத்துணர்வு என்ற பாடத்தை ஏற்றால் உணர்வின் மேலேயே ஒரு வெறுப்பை உண்டாக்கி விடும் என்று பொருள்). முல்லை நகரவும் முடியாமல் கிடக்கச் செய்துவிடும் : நீலமலர் கொன்று விடும் தன்மையுடையது — இவையே மதனனின் அம்புகளின் குணங்களாகும்,

மன்மதன் எய்யும் ஐந்து கணைகள் இத்தகைய குணங்கள் உடையன என்று தெரிந்துவிட்டதால் இவற்றில் எவற்றை அவன் ஆண்டாளின்மீது எய்தான் — எய்த கணைகள் ஒன்றா, இரண்டா அல்லது ஐந்துமா - என்று விளைவுகளைக்கொண்டு காதலின் பெருக்கினைக் கணித்து விடலாமே? ஆண்டாளின் வாய்மொழியாகிய நாச்சியார் திருமொழியின் பாசுரங்களிலிருந்து இத்தகைய கணிப்பைச் செய்து பார்க்க முடியும் : இதுவே நாச்சியாரின் காதல் எவ்வளவு என்று நாம் அளந்தறிய உதவு மல்லவா ?

மன்மதனின் முதற்கணை தாமரைப்பூ : அதனை எய்துவிட்டால் எய்யப்பட்டோர் காதலிப்பவரை மறக்க இயலாமற்போய்

விடும்; எப்பொழுதும் இடையருமல் அவரை நினைத்துக்கொண்டே இருக்கும்படி செய்து விடும். ஆண்டாள்மீது இந்தக் கணையைக் காமன் குறி தவருது எய்தான் என்பதற்குச் சான்று, பல இடங்களில் அவள் பரமனை நினைந்து நினைந்து உருகியதாகப்பாடும் பாடல்களே. இரண்டே பாடல்களை இங்கு உதாரணமாகக்கூறி அப்பாற்செல்லுவோம்.

ஒரு திருமொழியில் திருமாலின் நிறம் முதலியவற்றை நினைவூட்டும் கார்க்கோடற் பூ முதலியவைகளை விளித்துப் பாடுவாள் ஆண்டாள். அதில் முதற்பாட்டில்,

> கார்க்கோடற் பூக்காள்! கார்க்கடல்
> வண்ணன் என்மேல் உம்மைப்
> போர்க்கோலம் செய்து போரவிடுத்
> தவன் எங்குற்ருன்?
> ஆர்க்கோ இனிநாம் பூசலிடுவது
> அணிதுழாய்த்
> தார்க்கு ஓடும் நெஞ்சம் தன்னைப்
> படைக்க வல்லேன் அந்தோ!

என்று பாடுவாள். கோடற்பூக்கள் நீலநிறம் கொண்டது நாச்சியாருக்குத் திருமாலை இடையருது நினைப்பூட்டி வதைக்கும் எண்ணத்துடனேயே இப்படி இவருக்கு நீல நிறத்தைத் தந்து போர்க்கோலம் செய்தனுப்பியவன் உயிரினங்களுக்கெல்லாம் நாதன்! ஆகவே யாரிடம் யாரைக் குறித்து வழக்குத் தொடுப்பது? அவன் அணிந்த துழாய்த்தாரிடம் ஓடிச் சென்று திரும்பி என்னிடம் வராதே அங்கேயே தங்கி விடுகிறது என் நெஞ்சம்! என்று நொந்து கொள்கிருள் பக்திப் பெருஞ்செல்வி.

மன்மதன் எறிந்த அரவிந்தக்கணை ஆண்டாளின் உள்ளத்தே தைத்து அவளால் மாலினை மறக்க முடியாமற் செய்து விட்டது. பகலெல்லாம் அவனை எண்ணி எண்ணிப் புலம்புவதோடல்லாமல் இரவிலும் தூக்கமின்றி அவன் நினைவாகவே இருந்து கொண்டு ''நெடிய கழியும் இரா'' என்றபடி அல்லற்பட்டு வாழும் நிலையும் காமன் கணையாகிய தாமரை செய்த வினைவேயன்றே?

> என்புருகி இனவேல் நெடுங்கண்கள்
> இமைபொருந்தா பல நாளும்
> துன்பக் கடல்புக்கு வைகுந்தன்
> என்பதோர்
> தோணி பெருது உழல்கின்றேன்
> அன்புடையாரைப் பிரிவுறும் நோய்
> அது நீயும் அறிதி குயிலே
> பொன்புரை மேனிக் கருளக் கொடி
> யுடைப்
> புண்ணியனை வரக் கூவாய்!

ஒரு வடமொழி சுலோகத்தில் கேசவன் ஓடக்காரன் என்று புகழப்பெறுவான். இங்கு அவனே தோணியாக வருணிக்கப்படுகிறான். சம்சாரம் என்ற பெருங்கடலைக் கடக்கத் திருமாலைத் தவிர வேறு உபாயம் இல்லை. அவனே சாத்தியமும் சாதனமுமான நிலை. ஆண்டாள் தாமரைக் கணையால் தாக்குண்டு அவனையே நினைந்துருகித் தூக்கமின்றி இரவைக் கழிப்பது தமிழ் அகப்பொருள் இலக்கியத்தில் விரவிவரும் கருத்தினை ஒட்டியதே ஆகும்.

'ஓர்யான் மன்ற துஞ்சாதேனே' என்று புலம்பிய குறுந்தொகைத் தலைவியின் நிலையும் ஆண்டாளது நிலையும் ஒப்பு நோக்கற்கு உரியவையே.

மாரனின் இரண்டாம் அம்பு மாம்பூ. இதனல் தாக்குண்ட பெண்ணுக்குத் தோலின் இயற்கையான நிறம் மாறிப் பசலை பூத்து விடும். காதலரைப் பிரிந்திருக்கும் காலை பசலை படரும், அவன் வந்து அவளைத் தொட்டுப் பழகினல் அது நீங்கி விடும் என்று ஆசிரியர் பரணர் பாடிய பாட்டு குறுந்தொகையில் சேர்க்கப்பட்டது.

> தொடுவுழித் தொடுவுழி காதலர் நீங்கி
> விடுவுழி விடுவுழிப் பரத்தலானே.

மாம்பூ என்னும் கணையை மன்மதன் ஆண்டாள் மீது எறிந்தான், அது இலக்குத் தவருது. பாய்ந்தது என்பதற்குச் சான்றுகள் நாச்சியார் திருமொழியில் விரவிக் கிடப்பன. இரண்டே பாடல்களை ஆராய்ந்து மேலே செல்வோம்.

ஒரு திருமொழி முழுதும் ஆண்டாள் தனக்குற்ற நோயைக் குறிப்பிட்டுத் தன் தாயாரை நோக்கி ''என்னைப் பண்பெண்டாக்க உறுதி ஆகில் என்னைக் கண்ணன் வாழ்ந்து பழகிய இடங்களில் கொண்டு போய் விட்டு விடுங்கள். என் நோய் குணமாகி விடும்!'' என்று கேட்போர் நெஞ்சு உருகும்படி பாடுகின்ருள் ஒரு பாட்டில்,

வண்ணத் திரிவும் மனங்குழைவும்
மானமிலாமையும் வாய் வெளுப்பும்
உண்ணல் உருமையும் உள்மெலிவும்
ஓதநீர் வண்ணன் என்பான் ஒருவன்
தண்ணத்துழாய் என்றும் மாலை
கொண்டு சூட்டத் தணியும்
பிலம்பன் தன்னைப்
பண்ணழியப் பலதேவன் வென்ற
பாண்டி வடத்தென்னை உய்த்திடுமின்.

தன் மேனியில் பசலை படர்ந்திருத்தலை ''வண்ணத்திரிவு என்கிருள் கோதை. பசலை முதலிய மாற்றங்களைப் போக்கப் பாண்டி வடம் என்ற இடத்தில் என்னை விட்டு விடுங்கள் என்று இறைஞ்சுவாள் தன் தாயரிடம் பாண்டிவடம் என்ற பகுதியில் தான் பல தேவன் பிரவம்பாசுரனைக் கொன்றது.

நாச்சியார் திருமொழியில் மேக விடு தூது என்ற மொழி உணர்ச்சியின் எல்லை நிலமாயிருக்கும். அதில் ஒரு பாசுரம்

ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்-
தோடு இவை எல்லாம்
எளிமையால் இட்டென்னை ஈடழியப்
போயினவால்
குளிரருவி வேங்கடத்து என்
கோவிந்தன் குணம் பாடி
அளியத்த மேகங்காள் ஆவிகாத்து
இருப்பேனே.

பசலை படர்ந்தமையை வண்ணம் அழிந்தது என்கிருள் ஆண்டாள். இரண்டாம் கணையாகிய மாம்பூ நன்ருகச் சென்று இலக்கிலே தைத்திருக்கவேண்டும், நாச்சியார் படும் பாட்டைப் பார்க்கில் !

மன்மதனின் மூன்ரும் பாணம் அசோக மலர்: இது அனைத்துணர்வும் நீங்கிப் போகும் படி செய்து விடும். ஆண்டாள் முன்பு காட்டிய பாசுரத்திலே தன் சிந்தை அழிந்து போனமை பற்றிப் பேசினுள். அசோக மலர் இவளின் மேல் எய்யப்பட்டதற்கு இதுவும் ஒரு சான்று. தவிரவும்

தென்றலும் திங்களும் ஊடறுத்து
என்னை
நலியும் முறைமை யறியேன்
என்று புலம்புவதிலிருந்தும்
கஞ்சைக் காய்ந்த கருவில்லி
கடைக்கண் என்னும் சிறைக்கோலால்
நெஞ்சு ஊடுருவ வேவுண்டு
நிலையும் தளர்ந்து நைவேன்

என்று அல்லற்பட்டு உருகிப் பாடுவதிலிருந்தும் மாரன் அவள் மீது அசோக மலரைக் குறிதவருது எய்தான் என்பதை ஊகித்தறியலாம்.

வனத்திலுறு முல்லையே மன்மதனின் நான்காம் கணை: இதனை ஒரு பெண் மீது எய்து விட்டால் போதும். அவள் காதல் நோயால் பெரிதும் அல்லற்பட்டுப் படுத்த படுக்கையாகி விடுவாள். ஆண்டாள் கண்ணன் மீது கொண்ட காதலின் காரணமாக நகரவும் இயலாது கிடக்கின்ற நிலையை அவளது உணர்ச்சிப் பொறிபறக்கும் சொற்களிலேயே காண்போம்.

நடையொன்றில்லா உலகத்து
நந்தகோபன் மகன் என்றும்
கொடியகடிய திருமாலால்
குளப்புக்கூறு கொளப்பட்டுப்
புடையும் பெயரகில்லேன் நான்
போட்கள் மிதித்த அடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்காள்
போகா உயிர் என் உடம்பையே.

இந்தப் பிரபந்தத்திலேயே மிகச் சிறந்த பாடல் இது என்று கூறிவிடலாம். எத்தனை, எத்தனை நயங்கள், பாவங்கள், ஒரே ஒரு சிறிய பாட்டிலே! தன்னை இரக்கமின்றிப் புறக்கணிக்கும் திருமாலுக்குச் சுடச்சுட வசை மொழிகளைத் தொகுத்துப் பாடுகிறுள் முதல் மூன்று வரிகளிலே. அவன் மீது கொண்ட காதலினுல் தான் இன்று அடைந்த நிலையை முல்லை நிலத்துக்கேற்ற ஓர் உருவகத்தால் திறம்பட வருணித்தாள் இரண்டாம் வரியின் முடிவிலே. மாட்டின் குளம்படியில் சிற்சில சிறிய பிராணிகள் மிதிப்பட்டு இறப்பதை ஆய்ப்பாடியில் பார்த்திருக்கிருள். தன் நிலையும் அதுவே என்று உணர்த்தவே ''குளப்புக் கூறு கொளப் பட்டு'' என்று பாடினுள், முடிவில் இந் நோய்க்கு மருந்தாவது-அந்தத் துன்மார்க்கன் நடந்து சென்ற பாதையிலிருந்து அவனது அடிப்பொடியைக் கொணர்ந்து தன் உடம்பில் பூசினுல் பயன்படலாம் என்கிருள். அரங்கன் மீது ஆண்டாள் கொண்ட காதலின் ஆவேசத்தைப் பாருங்கள்!

> கதி என்றும் தான் ஆவான்
> கருதாது ஓர் பெண்கொடியை
> வதை செய்தான் என்றும் சொல்
> வையகத்தார் மதியாரே

என்ற வரிகளாலும்

> சங்கமா கடல் கடைந்தான்
> தண்முகில்காள், வேங்கடத்துச்
> செங்கண்மால் சேவடிக்கீழ்
> அடிவீழ்ச்சி விண்ணப்பம்

காமதேவனின் ஐந்தாவது அம்பு நீலோற்பலம்: அதை நன்ருகக் குறிபார்த்து ஒரு பெண்ணின்மீது தொடுத்து விட்டால் அவள் இறந்தே போய் விடலாம். இறைவனின் நாயகியாக வரவிருக்கின்ற கோதைக்கு மரண மில்லை. ஆகவே இறத் தலுக்குச் சமமான நிலையில் கொணர்ந்து விட்டு விட்டது நீலோற்பலக்கணை. - இதைப் பல பாடல்களிலிருந்தும் அறிந்து கொள் கிருேம். கீழே காட்டிய பாடலில் ''போகா உயிர் என் உடம்பையே'' என்ற பகுதியும் இந்நிலையைக் காட்டும். இதுவன்றி

> கொங்கை மேல் குங்குமத்தின்
> குழம்பழியப் புகுந்து ஒரு நாள்
> தங்கு மேல் என் ஆவி
> தங்கும் என்றுரைப்பீரே

என்ற பாட்டாலும்

கோவை மணுட்டி நீயுன் கொழுங்கனி கொண்டு எம்மை ஆவி தொலேவியேல்: வாயழகர் தம்மை அஞ்சுதும் என்ற பகுதி யாலும் கோதை மரணமடைந்து விடுவாளோ என்ற நிலைக்கு வந்து விட்டாள் என்பது தெளிவாகிறது. இந்நிலைக்கு அவளைக் கொணர்ந்தது மன்மதனின் ஐந்தாம் கணை யாகிய நீலோற்பலமே அன்றி வேறு எது வாக இருக்கமுடியும்?

கோதையின் அருளிச் செயல்கள் வழி யாகவே, அவள் மேல் மன்மதன் தனது ஐந்து மலர்க்கணைகளைக் குறிதவருமல் எய்து விட்டான் என்பதை அறிந்து கொள்கிருேம். கோதை அரங்கன் மீது கொண்ட காதல் ஐங்கணைக் காதல் என்று அறியத் தகுந்தது. இதுவே அளவிடற்கரிய கோதையின் அன்புக்கும் ஓர் அளவு கோலாக உதவுகிறது, அல்லவா? ★



# பசவேஸ்வரர்

திருமதி தி. கி. நாகம்மாள்

நிலவுலகில் எவ்வெப்போது தர்மம் குன்றி அதர்மம் மேலோங்கி வளர்ந்து அல்லல் விளைவிக்கிறதோ அவ்வப்போது இறைவ னருளால் ஆங்காங்கு சிறந்த ஞானியர் தோன்றி மக்கட்கு நல்வழிக் காட்டுவர் என்று பொதுவாக நம்பப்படுகிறது. இக்கருத்துக் கேற்ப பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற் பகுதியில் கர்நாடக மாநிலத்தில் சைவசமயம் க்ஷீணித்து, நால்வகை வருண பாகுபாடு மிக்கோங்கி சமுதாயம் சிறுசிறு கூறுகளாகப் பிரிந்து, தீண்டப்படாதவர் எனப் பெரும் பான்மையோர் ஒதுக்கப்பட்டு, சமயம் என்பது ஒரு சிலரது பிறப்புரிமையாகவும், சிறப்பு உரிமையாகவும் வளர்ந்திருந்தது. ஒற்றுமையை வளர்க்க வந்த மதம் வேறு பாட்டையும், பிளவையும் வளர்க்கலாயிற்று. இச்சமயத்தில் தான் கருவிலே திருவுடைய ராக பசவேஸ்வரர் வீர சைவ அந்தணர் குடும்பத்தில் மூன்ருவது பிள்ளையாகப் பிறந்தார். தந்தை அக்கிரகாரத்தலைவர், கிராமணி, மாதரசா என்ற பெயருடையவர். தாய் மாதர்குலதிலகமாக விளங்கிய மாதலாம்பிகை. இக்கால பீஜப்பூர் தாலூகாவின் அருகில் இருந்த இங்கனேஸ்வர பாகேவாடி இவர் பிறந்த இடம். ஆண்டு கிறிஸ்துவுக்குப் பின் 1131 என்று எண்ணப் பட்டது. இவர் பிறந்த நன்னுளில், கூடல சங்கம தேவாலயத்தினின்று போந்த ஈசானிய குரு, சடவேதமுனி என்ற சரணர், குழந்தையை யாசீர்வதித்து இலிங்கதாரணஞ் செய்து வாழ்த்திச் சென்றனர். நந்தீஸ்வரரைத் தொழுது வழிபட்டு அப்பயனுல் அவதரித்த குழந்தையும் வைதீக முறைப்படி வளர்க்கப் பட்டு உபநயனச் சடங்கு ஆற்றப்படும் பருவமடைந்தார். எட்டு ஆண்டு வளர்ச்சியில் பசவேஸ்வரர் குலதர்ம வழிபாட்டு முறைகள், மூடப்பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் இவைகளையெல்லாம் கண்டறிந்ததோடு, மக்கட் சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும், நடை முறைகளையும் பற்றிச் சிந்திக்கத் தலைப் பட்டார். அதன் விளைவாக வைதீக முறைப்படி ஏற்பாடு செய்யப்பட்ட உபநயனச் சடங்கினை எதிர்த்து வாதாடி, தான் பிறந்த போதே இலிங்கதாரணையாகி விட்டதை எடுத்துக் காட்டிப் பெற்ரேரை விட்டுப் பிரிந்து இஷ்ட தெய்வமாகிய கூடலசங்கம தேவரை நோக்கிப் புறப்பட்டு விட்டார்.

அக்காலத்தில் கிருஷ்ணு நதியும், அதன் கிளையாகிய மேலப்பிரபையும். சந்திக்கு மிடத்தில் இருந்தது கூடலசங்கமம். சமுதாயத் தொடர்பை விட்டுச் சென்ற பசவேசர், ஏறக்குறைய பன்னிரண்டு ஆண்டுகள் அங்கேயே தங்கியதாகத் தெரிகிறது, இக் கால அளவில் அவர் தன் சிந்தனையை வளர்த்து, சிறந்த ஞானியாகி, வேத, ஆகம, புராண, காவியங்களைக் கற்று, புரட்சி வீர ராகி' 'ஒருவனே தேவன், ஒன்றே குலம்' என்று உணர்ந்து, ''காயகமே கைலாசம்'' என்ற பொன் மொழிகளின் பொருளைப் போதிக்கத் தலைப்பட்டார். மனித வாழ்வு மாண்புற வேண்டுமென்ருல் இறைப்பணிக்கே அர்ப்பணிக்கப் படவேண்டும், கர்மயோகியாக பத்தி ஞான வழிகளில் வளர்ந்து வாழ வேண்டும், இல்லற வாழ்வில் இருந்து கொண்டே ஞான மார்க்கத்தில் செல்ல வழி காட்ட வேண்டுமென்று குரு போதிக்க பசவண்ணரும் இருமனைவியரை மணந்து கல்வியறிவு மேம்பாட்டில் மகாராஷ்டிர மன்னன் பிஜ்ஜலன் அழைப்பினை ஏற்று மங்களவாடி சென்று, அம்மன்னனின் தண்ட நாயகராகவும், பொக்கிஷதாரராகவும் பணியேற்று வாழ்ந்து வந்தார். அரசியலிலும், சமூகப் பணியிலும் ஈடுப்பட்டிருந்தாலும், இறைப்பணியை மறவாத பசவண்ணா,

சமய வகுப்பு வாதமின்றி அறத்தின் வாயில் எல்லோருக்கும் திறக்கப்பட வேண்டுமென்று, அநுபவ மண்டபம் என்ற உன்னத சங்கத்தை நிறுவி பேதமின்றி சிறந்த பல ஞானிகளை ஒன்று கூட்டினர் இக்காலத்தின் தலைவர் வீரசைவ ஜங்கமர் அல்லமப் பிரபு. அவருடனிருந்து தெய்வப்பணியாற்றியவர், சித்தராமர், மாடிவாள மாச்சய்யா, அம்பிகா சௌடய்யா முதலியவர்கள்.

சமய வரலாற்றில் ஒரு புது யுகத்தைப் படைத்தவர் பசவண்ணர். தாழ்த்தப்பட்ட மனிதனும், இறைஞானம் பெற்றுத் தத்துவ ஞானியாக இயலும் என்பதை நிலைநாட்டிக் காட்டினர். பழைமை விரும்பிகள் மத்தியில் இவரது புரட்சிக் கருத்துக்கள் கலவரத்தை யுண்டாக்கியது. எதிர்ப்புக்களைத் துணிவோடு தாங்கிக்கொண்டு மதுவராசா என்ற அந்தணன் மகளுக்கும் அரளய்யா என்ற தீண்டப்படாதவன் மகனுக்கும் திருமணம் நடத்தி வைத்தார் பசவண்ணர். எதிரிகள் எண்ணிக்கை அதிகமானதோடு, பிஜ்ஜல மன்னனும் வீழ்த்தப்பட்டான். அரசியல் குழப்பங்களாலும், சதிகள் பலவாலும் வெறுப் படைந்த பசவண்ணர் கூடல சங்கம தேவரையே அடைக்கலமடைந்தார். இதற்குள்ளாக பக்தி, ஞான, கர்ம மார்க்கத்தில் ஒளிவிளக்காக பிரகாசித்த பசவண்ணர் சிறந்த சமூக சீர்திருத்தவாதியாகவும், சகுத்தல நெறியில் எட்டு அங்கங்களையும் கடந்த சாதகராகவும், பக்தியில் தலைசிறந்த ஞானியாகவும், கன்னட மொழிக் கவிஞராக வும், ஆத்மஞான போதகராகவும் திகழ்ந்தார். அவரது வளர்ச்சிக்கும் அருமருந்தன்ன போதனைகட்கும் அவரது வசனகவிதைகளே சான்றாகும். தமது முப்பத்தாருவது வயதில் ஆழ்ந்த ஆத்ம ஞான முதிர்ச்சியில் 'இலிங்காங்க சமரஸ்யா' என்னும் ஒப்பற்ற கூட்டு இயக்கத்திலீடுபட்டு சங்கம ஐக்கிய மாட இறையருள் பெற்றுர் என்று முடிகிறது அவரது வாழ்க்கை வரலாறு.

பசவண்ணரது பக்திப் போதனைகள் எவரையும் படிப்படியாக உயர்த்திச் சிறந்த ஞானிகளாக்கக் கூடியவை என்பதை ஓிரண்டு உதாரணங்களால் அறியலாம். திரிவித தாசோஹம் என்று அவரால் அழைக்கப்பட்ட குரு, லிங்க, ஜங்கம வழிபாட்டு முறை எவ்வளவு உயர்ந்தது என்பதை இக்கால மக்களும் அறிந்துணர்ந்து போற்றக்கூடியது. தெய்வீக ஏக்கத்தில் அவர் பாடிய பாடல்:-

''இறைவனே! இவ்வுலகம் தன் வலையில்
என்னை யகப்படுத்தி விட்டது, பையினுள்
அகப்பட்ட
எலியைப் போல் விடுதலை வேண்டித்
தவிக்கின்றேன்
உன் கருணையே கதி கூடல சங்கம தேவா''

தன்னைப்பற்றிக் கூறும் போது —

''நான் இறைவனைக் காண ஏங்கும் போது
கூடல சங்கமா
என்வழியில் இருட்டை யுண்டாக்குகிறதே
மாயை''

'இந்த உலகத்து இராகு என்னை விழுங்கி விட்டது. நான் பாம்பின் படத்தடியில் உள்ள தவளையானேன். உலகப்பாம்பு என்னைக் கடித்துப் பஞ்சேந்திரியங்களிலும் விஷத்தைக் கக்கி விட்டது. என் மனமோ கொம்பிலுள்ள குரங்காகப் பாய்கிறது. பலியிடத்தந்த ஆடு, தோரணத்திலுள்ள இலையைத்தின்ன ஆசைப் படுவது போலவும், நெய் வாசனையுடைய தென்பதற்கே கூரிய வாளாயுதத்தை நக்க ஆசைப்படும் நாய் போலவும் என் மனம் அலைகிறது. அத்திப்பழம்போல் அழுகிய என் உள்ளத்தைப் புனிதப்படுத்தி, வௌவால் போன்ற என் வாழ்வைச் சீராக்கி உன்னருளைக் கொடுத்துக் காக்க வேண்டும்' என்றெல்லாம் பாடுகிருர்.

''என்தந்தையும் நீ! தாயும் நீயே,
சகலசுற்றமும் உறவும் நீயே
உன்னையன்றி எனக்காருமில்லை
ஓ! கூடலசங்கம தேவா என்னை
உன்னிச்சைக்கு ஆட்படுத்து''

இப்படி இறையருளைப் பெற ஏங்கிப் பாடிய பசவேஸ்வரர். தெய்வ நாம ஸ்மரணைபற்றிப் பாடும் போது சொல்கிருர்:-யானை, தாற்றுக் கோலுக்கஞ்சும் மலை இடிஇடிக்க அதிரும், இருள் ஒளியைக் கண்டகலும், காடு கடு நெருப்பினையஞ்சும், பஞ்சமா பாதகங்கள்

இறைவனின் நாமம் கேட்க அகலும் கூடல சங்கம தேவா நின் நாமம் கேட்க ஓடும். என்று கூறி முடிக்கிருர் இவ்வாறு—

''ஓம் நமசிவாய எம்பது மந்த்ரவ
ஜபிசுத்தேனய்யா கூடல சங்கம
தேவா''. (கன்னடம்)

ஒருவனே தேவன் என்ற கருத்தைப் பின் வருமாறு பாடுகிருர் பசவண்ணர். எளிமையாக யிருப்பதால் கன்னட மொழியிலேயே தருகிறேன்.

'சுவாமிநீனு, ஷாஸ்வதநீனு, எத்திதே
விருத ஜகவெல்லறியலு,
மஹாதேவ, மஹாதேவ, இல்லிந்த
முந்தே ஷப்தவில்ல பசுபதிக்கே
ஏகோதேவ, சுவர்க்க மத்திம பாதாள
தொளகே
ஒப்பனே தேவா, கூடல சங்கம தேவா''.

மூவுலகுக்கும் ஒருவனே கடவுள் என்று கண்ட பசவண்ணு மக்கட் கூட்டத்தைப் பற்றிக் கூறவந்தவர் அவரது ஒற்றுமையை விளக்கிப் பின்வருமாறு பாடுகிருர்.

''காகே யொந்தகள கண்டரே கரேயதே
தன்ன பகைவனு?
கோளி யொந்து குடுகு கண்டரே கூஹி
கரேயதே தன்ன குலவெல்லனு?
சிவபக்தனுகி பக்தி பக்குவ வில்லதித்தரே
காகே கோளியிந்த
கரெகெட்ட கூடலசங்கம தேவா!''

காக்கைக் கோழியைக் காட்டிலும் கெட்டவ ராவர் ஈத்துவக்கும் இன்பத்தைக் காணுத மக்கள் பக்தி மார்க்கத்திலீடுபடும்போது என்றும், தானும் வாழ்ந்து பிறரையும் வாழ விடுவது நல்லெண்ணம் என்று எடுத்துக் காட்டுகின்ருர்.

இன்னும் பக்தரல்லாதார், உலக விவகாரத்திலீடுபட்டு, எதிர்ப்பதே தம் திறமை என்று வாழும் மக்களைப்பற்றி அவர் கூறுவது.

''பேவின பீஜவன்னுபித்தி, பெல்லத
கட்டிய கட்டி
ஆகள ஹாலெரது, ஜேனதுப்பவ
ஹொய்தரே சிஹியாஹபல்லதே?
கஹியாஹபல்லதே? சிவபக்தரல்லாத -
வரகூட நுடியலாகது
கூடலசங்கம தேவா''.

வேப்ப விதையிட்டு வெல்லத்தைத் தூவி, ஆவின் பாலைச் சொரிந்து, தேனும் நெய்யும் பெய்து வளர்த்தால் அது இனிப்பாக மாறுமா அல்லது கசப்பாக இருக்குமா? சிவபக்தியில்லாதவரிடத்துப் பேசக் கூடாதப்பா கூடலசங்கம தேவா என்கிருர். இப்படியாக துவைத நிலையில் துவங்கி அத்வைத நிலையையும் கண்டு மேம்பட்ட தம் தெய்வ நிலையைத் தான் அனுபவித்தவாறு அவர் கூறுவது.

''வசனதல்லி நாமம்ருதவ தும்பி,
நயனதல்லி மூர்த்தி தும்பி
மனதல்லி நின்ன னெனப்பு தும்பி,
கிவியல்லி கீர்த்தி தும்பி
கூடலசங்கம தேவா நிம்ம சரண
கமலதலானு தும்பி.''

இதில் மகிழ்ச்சியோடு 'இறைவா என் சொற்களில் நின் திருநாமம், கண்களில் உன் உருவம், மனதில் உன் நினைவு, செவியில் உன் புகழ் எல்லாம் நிறைந்து உன் தாமரை பாதங்களில் சரணடைந்த தும்பி (வண்டு) ஆனேன் என்று பாடுகிருர்.

அவரது மேம்பட்ட தெய்வ நிலை பின்வரும் பாட்டால் தெட்டென விளங்கும்.

''பண்பட்ட பக்தியென்னும் நிலத்தில்,
குரு என்னும் விதை செழித்தது.
இலிங்கம் என்னும் இலை பிறந்தது.
பின்னர் பூவுக்கான எண்ணம் வந்தது
மென்மையான பழம் செயற்பட்டது.
பழுத்த பழத்திற்கான அறிவு
தோன்றியது
அறிவுப்பழம் பழுத்து வெடித்தவுடன்
காம்பிலிருந்து தளர்ந்து விழுந்து
விட்டது.
காண்! கூடலசங்கமதேவா? யாருக்கு
வேணுமோ? அவரே அத்தனையும்
சேகரித்துக் கொண்டார்.''

பசவண்ணர் பழுத்த பழம். தன்னை அர்ப்பணித்து இறைவனேடு வேண்டி தம் இருதயத்தோடு கலந்து விடும் படிஏற்றுக் கொள்கிருர். இவரது ஞானம் பொதிந்த பாடல்கள் பலப்பல, என்றும் ஒளி வீசி இறைவழிகாட்டி நிற்பன. ★

# மூன்று உழவுகள்



ராஜேஸ்வரி நடராஜன்

''தாயே! உன் திருவாய் திறந்து என்னை வாழ்த்து'' என்ருன் மன்னன்.

''வரப்புயர!'' என்று வாழ்த்தி நிறுத்தினுள் தமிழ் மூதாட்டி ஔவை.

மன்னன் மருண்டான். என்ன இது? நம்மை வாழ்த்தச் சொன்னுல் வரப்பை வாழ்த்துகிருளே! என்ற திகைப்புடன் மூதாட்டியை ஏறிட்டு நோக்கினுன். மன்னன் குழப்பத்தைக் குறிப்பால் உணர்ந்த ஔவை தன் வாழ்த்தை மேலும் தொடர்ந்தாள். இவ்வளவுதானு, உனக்குத் தெரிந்த இலட்சணம்?' என்று சொல்லாமல் சொல்வது போலப் பேசினுள்.

வரப்புயர நீர் உயரும் ;
நீர்உயர நெல் உயரும் ;
நெல்உயரக் குடி உயரும் ;
குடிஉயரக் கோன் உயரும் ;

என்று ஔவை தன் வாழ்த்தை முடிக்கவும் மன்னன் முகம் மலர்ந்தது. மனம் நிறைந்தது 'வரப்புயர' வாழ்த்துக்கு நல்லதொரு விளக்க மும் கிடைத்து விடுகிறது.

நெல்லும் நீரும் மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் என்பது எல்லோரும் அறிந்த ஒன்று. ஆகவேதான் அன்றும் இன்றும் உழவு மனித நாகரீகத்தின் உயிர் நாடியாக விளங்கி வருகிறது. ''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்''—என்று திருவள்ளு வர் தொடங்கி வைத்தால், உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்''— என்று இருபதாம் நூற்ருண்டுக் கவிஞர் பாரதி தொடர்ந்து பாடுகிருர். அவர் அடிச் சுவட்டைப் பின்பற்றி இன்று வரை எத்தனை எத்தனையோ கவிஞர்கள் உழவின் உயர்வைப் பாடி விட்டார்கள். உழவின் மேன்மை குறித்து எத்தனைத் தடவை பாடினுலும், எப்படி எப்படிப் பாடினுலும் பாடுகின்ற கவிஞர் களுக்கும் அலுப்பதில்லை, அதைப் படிக்கின்ற மக்களுக்கும் அலுப்பதில்லை. காலத்தை வென்று, என்றும் நிலைத்து நிற்கும் தன்மை உடையவை அவை

இன்று, இந்த அலை வரிசையிலே, மூன்று உழவுகள் வந்து மோதுகின்றன. மூன்றும் தனித் தனியான உழவுகள், உழவு முறை தான் மூன்றிலும் ஒன்ருக இருக்கிறதே தவிர, வித்தும் விளைவும் வேறு வேருகத்தான் இருக்கின்றன. வேருக மட்டுமல்ல, ஒன்றை ஒன்று விஞ்சியும் நிற்கின்றன.

வையை பாயும் வளமான பூமி மதுரை- அந்தத் தென்னன் திருநாட்டிலே பார்க்குமிட மெங்கும் தேன் பெருகும் சோலைகளும், கனி உதிரும் காவுகளும்தான். வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் வண்டி வண்டியாக முத்து வந்து குவிந்து கிடக்கிறது நகரெங்கும் சோலைகளிலோ வாழை வடக்கீனும்; ஓங்கி உயர்ந்து நிற்கும் கமுகு தெற்கீனும்; கரும்பும் இளநீருமோ செழித்து வளர்ந்து முற்றி, வெடித்து கருப்பஞ்சாற்றையும் இள நீரையும் மடைபாய விட்டு நிற்கின்றன. சோலைகள் இருக்கட்டும் - வயல்களைப் பாருங் கள் - உழவு நடக்கிறது போலிருக்கிறதே!

நமக்கு வேண்டியது அதுதானே? ஒவ்வொரு தாளும் ஆளுயரம் நிமிர்ந்து, பின் தலைச்சுமை தாங்காது ஒரு புறமாய்ச் சாய்ந்தல்லவா கிடக்கின்றன. ஒரு கட்டுக்கே கலம் நெல் காணும் போலிருக்கிறது. கட்டு என்ன? கதிர் ஒன்றுக்கே உழக்கு நெல்லுக்குக் குறைவிருக் காது போலிருக்கிறதே! பார்க்கலாம்! அறுவடை நடக்கிற மாதிரிதானே தெரி கிறது? அதோ! விளைந்து முற்றிய கதிரை அறுத்துக் கொண்டே வரும்போது! இதென்ன அடியில்? மறுதாள் பயிராகியிருக்கிறதே!...... என்ன விந்தை! கதிர்களுக்கிடையே, தேனீ வேறு அல்லவா கூடுகட்டியிருக்கிறது. அப்படி யானால் கதிர்கள் எவ்வளவு நெருக்கமாக இருக்க வேண்டும்...... சரிதான்! சரிதான்! இப்படியெல்லாம் இருப்பதால்தானே மாடு கட்டிப் போரடித்தால், மாளாது வேலை முடி யாது–சரிப்பட்டு வராது என்று யானைகளையே கொண்டு வந்து போரடித்துக் கொண்டிருக் கிருர்கள்–விஷயம் இப்போதல்லவா புரிகிறது!

தேன் பெருகும் சோலை தென்னன்
வளநாடு
கனிஉதிரும் சோலை கனமதுரை
நன்னுடு
வடகாஞ்சி முத்திறங்கும் வடமதுரைப்
பட்டினமாம்
தென்காஞ்சி முத்திறங்கும் தென்மதுரை
பட்டினமாம்
வாழை வடக்கீனும், வான்கமுகு
தெற்கீனும்
கரும்பும் இளநீரும் கண்திறந்து
மடைபாயும்
கட்டுக் கலங்காணும், கதிர் உழக்கு
நெல்காணும்
அரிதாள் அறுத்துவர, மறுதாள்
பயிராகும்
அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன்
கூடுகட்டும்
மாடுகட்டிப் போரடித்தால் மாளாது
செந்நெல் என்று
ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான
தென்மதுரை

பாட்டைப் பாடப்பாட, கரும்பும் இளநீரும் நமது நாவிலும் கண்திறந்து மடைபாய்வது போன்ற சுவையை உணர்கிருேம். அருமை யான உழவுக் காட்சியைக் கண்ட பரவசம் நெஞ்சில் நிறைகிறது. இயல்பான உழவை அதன் பூரணப் பொலிவோடு நம் முன் நடத்திக் காட்டி விடுகிறது, அல்லி அரசாணி மாலையிலுள்ள இந்த வரிகள். காட்சி கண் ணிலே நிலைக்கிறது. வரிகள் நெஞ்சிலே நிலைக்கின்றன. பாடலை நமக்குத் தந்தவர் புகழேந்திப் புலவர்.

### அடுத்த உழவு

ஆறையர் கோன் ஏகம்பவாணன் செல்வ மும் செல்வாக்கும் மிகுந்தவன். நாடிவரும் புலவர்களை எல்லாம் ஆதரிப்பவன். அவர் களது அன்புக்கும் பாராட்டுக்கும் உரியவன் அவனுடைய இந்தப் புகழ், மூவேந்தருக்கும் வேம்பாய்க் கசக்கிறது. தங்களைவிட ஏகம்ப வாணனுக்கு இப்படி ஒரு புகழா - என்று காய்ச்சல். சமயம் நேரும்போது 'மட்டம் தட்டவேண்டும்'-என்றுகறுவிக் கொண்டிருக் கிருர்கள்-இந்த நிலையில், ஒருநாள் தூதுவன் ஒருவனை அனுப்பி ஏகம்பவாணரை அழைத்து வரச் சொல்கிருர்கள். அது சமயம், 'அவர் கழனிக்குப் போயிருக்கிருர்'- என்று அவர் மனைவி சொல்ல - அந்தச் செய்தியைத் தூது வன் அறிவிக்கிருன். ''இவ்வளவு செல்வமும் புகழும் நிறைந்த ஒருவர் கழனிக்குப் போய் நாற்று நடப்போயிருக்கிருரா''?- என்று எகத் தாளமாகப் பேசுகிருர்கள் முடி மன்னர்கள். இந்தப் பேச்சு ஏகம்பவாணர் மனைவி காதுக்கு எட்டுகிறது. அவளுக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கிக் கொண்டு வருகின்றன அந்த ஆத்திரத்திலே பேசுகிருள், ''ஆமாம்– கழனிக்கு முடி நடத்தான் போயிருக்கிருர் - எப்பேர்ப்பட்ட கழனி-எப்பேர்ப்பட்ட முடி தெரியுமா? தெரியாவிட்டால் தெரிந்து கொள்ளுங்கள்! ஏகம்பவாணர்

இறங்கியுள்ள களம் எப்படிப்பட்டது? அங்கே மூவேந்தருடைய சேனைகளே உரமாகப் பயன்படுகின்றன. அந்தச் சேனை சிந்திய இரத்தமே நீராகப் பாய்கின்றது. அதிலே யானைகள் நடந்து நடந்து சேருகிக் கிடக்கின்றது, ஆம். நடவுக்குக் கழனி தயாராகி விட்டது. அந்தக் கழனியிலே மூவேந்தர்களுடைய முடியையே பறித்து நாற்றாக நட்டுக் கொண்டிருக்கிறுன் ஏகம்பவாணன்; போய்ப் பாருங்கள்!'' என்கிறுள். ஏகம்பவாணன் மனையாளது கோபமும் ஆத்திரமும் பாட்டாக வெளிப்படுகிறது.

சேனை தழையாக்கி, செங்குருதி
நீர் தேக்கி,
ஆனை மிதித்த அருஞ்சேற்றில்—
மானபரன்
மாவேந்தன், ஏகம்பவாணன் பறித்து
நட்டான்
மூவேந்தர் தங்கள் முடி!

இந்த உழவிலும் நிலமுண்டு, நீருண்டு, நடவுண்டு. ஆனல் இந்த உழவுக்கும் முன்னர் நாம் மதுரையில் கண்ட இயல்பான உழவுக்கும் எவ்வளவு வேறுபாடு? அங்கு நெற்பயிர் நாற்றாக நடப்பட்டால், இங்கு மூவேந்தர் முடியல்லவா-அவர்கள் ஆணவமே அல்லவா நாற்றாக நடப்படுகிறது... அங்கே நெல் விளைந்தால் இங்கு வீரமல்லவா விளைகின்றது! அது பாண்டி நாட்டில் நடந்த உழவு. இது சோழ நாட்டில் நடந்த உழவு. தொண்டை நாட்டு உழவொன்றையும் பார்த்து விடலாம்.

மூன்றும் உழவு

'தொண்டை நாடு சான்றேருடைத்து' என்பது அவ்வை வாக்கு. தொண்டை நாட்டிலும் உழவு நடக்கின்றது. எங்கே? மக்கள் உள்ளத்திலேயே உழவு நடக்கின்றது, அந்த உழவு காரணமாகவே தொண்டை நாட்டில் சான்றேர் உருவாகி விடுகின்றனர்- அந்த உழவைத்தான் 'மெய்ம்மையாம் உழவு' என்று பாராட்டுகிறுர் அப்பர் பெருமான் உண்மை-சத்தியம் என்னும் அந்த உழவிலே, பக்தி தான் வித்தாகப் பயன்படுகிறது. ஆர்வம் என்னும் வித்தை விதைத்து விட்டால் போதும். அது அமோகமாக முளைக்க ஆரம்பித்து விடும். அவ்வப்போது பொய்ம்மை போன்ற களைகள் பயிரைக் கெடுக்கத் தலையெடுக்கத் தான் செய்யும் நம்முடைய பொறுமையையே அந்த இளம்பயிருக்கு நீராக்கி, அறிவாலும் தெளிவாலும் அதற்கு வேலிகட்டிப் பாது காத்து வந்தால் போதும். எதிர் பார்த்த பலன் கைமேல் கிடைத்து விடும். பிறவிப் பயன் எதுவோ அது பயிராக விளைந்து விடும்.

மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையே நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டு
செம்மையுள் நிற்பராகில்
சிவகதி விளையுமன்றே!

பக்தி என்னும் வித்தை விதைத்துத் தக்கபடிப் பேணிப் பாதுகாத்தால், விளைவது சிவகதியாக இருப்பதைப் பார்க்கிறேம். இத்தகைய பரமானந்த விவசாயம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் நடந்த காரணத்தால்தான் அன்று தொண்டை நாடு சான்றேர் உடைத்து என்று அவ்வை பாடியிருக்கிறுர் போலும்.

★




# அருட்பெருஞ்ஜோதி

டாக்டர் திருமதி சு.சிவகாமசுந்தரி, எம்.ஏ., டிப்.எட்., பிஎச்.டி.

தமிழகம் தெய்வபூமி; ஞானபூமி ஞானி; கள் பலரைப் பெற்றுக் கொடுத்த புண்ணிய பூமி; திருக்குறள், திருமந்திரம், திருவாசகம் திருவாய் மொழி, திரு அருட்பா போன்ற அரிய நூற்களைப் பெற்றுக் கொடுத்த ஞான மண். ''தேசம் எல்லாம் விளங்கிய தென் திசை''யில் தோன்றிய வள்ளல் பெருமான் வழங்கிய தாரக மந்திரம்

''அருட்பெருஞ்சோதி, அருட்பெருஞ்சோதி
தனிப் பெருங்கருணை அருட்பெருஞ்சோதி''

ஒளி ஒன்றே உலகத்தை இயக்கும் ஒப்பற்ற பேராற்றல் வாய்ந்தது. இதனால் உயிர்கள் பிறக்கின்றன. விழிக்கின்றன; சிறக்கின்றன; சிரிக்கின்றன' வாழ்கின்றன ஐம்பூதங்களில் நெருப்பும், ஐம்புலன்களில் கண்ணும் ஒளி வடிவிற்கு மறு வடிவாக விளங்குகின்றன.

''ஒண்சுடரானை உலப்பிலி நாதனை
ஒண்சுடராகி என்உள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழும் கடந்தகத்
தண்சுடர் ஓமத் தலைவனும் ஆமே''

என, உள்ளத்தின் உள்ளேயே ஒளிவீசும் சுடராக இறைவனைத் திருமூலரின் பழைய மரபு வழியிலேயே மறவாது இறைவனை ஒளி வடிவிலே கண்டார், பேரொளியைப் புரிந்து கொண்டார் வள்ளலார்

''சோதி'' ''பெருஞ்சோதி'' என்ற சொற்களின் மூலம் புத்தம் புதிய சொற்களைச் சுவையிலும், பொருளிலும் வளத்திலும் நடை முறைக்காகுமாறு போல வள்ளலார் விளக்கம் தந்துள்ளார் ''அருட்பெருஞ்சோதி'' ''அருட் சோதி'' என்ற தொடர்களைத் தமிழ் இலக்கியத்திற்கு ஆக்கித் தந்தவர் வள்ளலார் என்றே கூறலாம். பெருஞ்சோதியைப் பற்றிய கருத்துக்கள் காலத்தால் பழமையனவாக இருந்தாலும் சொல்லால் புதியதாக இருப்பதை உணரலாம்.

''ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்
சோதியை யாம் பாடக் கேட்டேயும்''

என்று திருவாசகத்தில் அரும்பெருஞ் சோதி என்ற தொடர் வந்துள்ளதே தவிர அருட் பெருஞ்சோதி என்ற இணைப்பு இல்லை. இறைவனைச் சோதியாக, ஒளியாகச் சொல்வது மரபு வேதமும் இதனைக் கூறுகிறது. இறைவனைச் ''சோதியானவன் ''என்கிறர் ''சோதியே, சுடரே, சூழொளி விளக்கே'' என்பர் மாணிக்க வாசகர். தேச விளக்கெலாம் ஆனாய் நீயே'' திருவையாறகலாத'' செம் பெரற்சோதி'', போன்ற அப்பர் பெருமான் கூற்றுக்களெல்லாம் ஒரு மகத்தான உண்மையைக் கூறுகின்றன. மனிதனது துவக்க காலத்தில் அவனது அகத்திலும் புறத்திலுமாகக் கால்கோள் கொண்டது. ஒளியேயாகும். இறைவழிபாட்டிலேயே அறிவுக்கு ஒத்த உயர்வழிபாடான 'ஒளி வழிபாடு' புரிந்து வந்த மக்கள் உருவ வழிபாட்டில் உள்ளத்தைப் பறி கொடுத்தனர்.

இறைபற்றாகிய பக்தி நிலையில் 'அரிச் சுவடி' நிலைதான் ''உருவ வழிபாடு' 'என்பர் அறிஞர். பள்ளியில் படிக்கப் புகும் சிறுவர் சிறுமியருக்கு முதலில் படங்களைக் காட்டி கல்வியில் ஆர்வத்தை ஊட்டுவது முறை. பிஞ்சு நெஞ்சங்களில் எழுத்துக்களும் கருத்துக்களும் பதியவைப்பதற்காகப் பயன்படுத்தப் படும் இந்த அரிச்சுவடி நிலையே தொடர்ந்து வருவதில்லை. அதுபோலத்தான் கல்லா மாந்தரையும் பற்றற்றோரையும் கடவுள்

நெறிபால் இழுப்பதற்காக அந்நாளில் உருவ வழிபாட்டு முறை உருவாக்கப்பட்டுப் பின்னர் பரப்பப்பட்டது.

கற்றுத் தேர்ந்த மனித இமை சிந்தித்துத் தெளிவடைந்து அறிவு முதிர்ச்சியடைந்த பின்னரும் இந்த உருவ வழிபாட்டிலேயே முடங்கிக் கிடக்க வேண்டுமா என்பது சிந்தனைக்குரியது; ஆய்வுக்குரியது. இத்தகு சிந்தனையைக் கிளறிவிட்டு, ஒளி விடச் செய்யும் ஒளி வழிபாட்டை மீண்டும் புதுப்பிக்கத் திருமூலர் உரக்கக் குரல் எழுப்ப முற்பட்டார்.

ஒளியிழந்த நிலை - கண்மூடிய இருட்டு நிலை-குருட்டு நிலை அகத்தும் வரக்கூடாது புறத்தும் வரக்கூடாது. கடவுளைத் தேடி காடு, மலை, நாடு அரனெல்லாம் கடந்து செல்லுவதோ கடுந்தவம் புரிவதோ, யாகம் மேற்கொள்ளுவதோ தேவையில்லாத ஒன்று உள்ளத்தில் உள்ள இறைவனைக் காண வேண்டும் 'உள்ளொளி பெருக வேண்டும். பேரொளியை அகத்தும், புறத்தும் ஏற்ற வேண்டும்.

இதற்கு அடிப்படைத் திட்டமாக - கண் கொண்ட அனைவரும் புறக்கண்ணால் கண்டு விளங்கிக் கொள்ளுமாறு வடலூரில் ஞான சபையைத் தோற்றுவித்தார் வள்ளலார். ''சோதி'' வடிவில் இறைவனைத் தொழ வேண்டிய நெறிகளைத் தமது திருவருட்பா பாடல்களில் வகுத்துக் காட்டியுள்ளார்கள்.

"என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடை அன்பே!
அருளொளி விளங்கிட ஆணவம்
எனுமோர்
இருளை என்னுளத் தேற்றிய விளக்கே
''உள்ளொளி'' ஓங்கிட உயிரொளி
விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட்
கனலே''

இந்த வரிகள் நாம் நமது இதயக்கோவிலில் ஏற்ற வேண்டிய ஒளி குறித்து வள்ளல் பெருமான் தெளிவாகப் பேசுவார்.

இந்த உடல் ஒரு கோவில் போன்றது. கோவிலின் நுழைவு வாயில் போன்றது நம் வாய். நம் உள்ளந்தான் கருவறை. இதனைப் பலரும் தெளிவாகக் கூறியிருந்தாலும் உள் ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்'' என்றார் திருமூலர். வள்ளல் பெருமானும் இந்த ஊனுடம்பை உயர்த்திப் பாடுகின்றார். நம் உள்ளத்தில் உள்ள அருட்பெருஞ்சோதி இறைவனைக் கண்டு கொண்டால். அவரது தனிப்பெருங் கருணையால் மரணமிலாப் பெருவாழ்வில் வாழலாம் என்பதே அவரது முடிவு.

''ஊனஉடம்பே யொளியுடம்பா
யோங்கி நிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே—
வானப்
பொருட் பெருஞ் சோதி பொதுவில்
விளங்கும்
அருட்பெருஞ் சோதியது''

என்பது அருட்பா,

இந்தப் பேரின்பத்தைத் தான் பெற்றதாக வள்ளல் பெருமான் பல இடங்களில் கூறுவார். ''தீப ஒளி கண்டவுடன் சேர்ந்தது சந்தோடம்'' என்பதைப் பல இடங்களில் பல வாறாக வகுத்து, தொகுத்துக் கூறுவார்.

கருணை நிறைந்த பேரின்ப வெள்ளமாக இறைவன் இருக்கின்றான். கருணையோடு சோதி வடிவாக, பெருஞ்சோதியாக அருட் பெருஞ்சோதியாக இருக்கின்றான். அவன் தொலைதூரத்தில் இல்லை. அருள் வடிவாக அன்புச் செயலால், அமுதமயமாக அவன் நம் உள்ளத்திலேயே இருக்கின்றான், ''காயெலாம் கனிவிக்கும் ஒரு பெருங்கருணை அமுதாக'' அவன் இலங்குகின்றான். இதனையே வள்ளல் பெருமான் தமது திரு அருட்பாவில் இப்படிப் பாடுவார்.

''அருள் விளக்கே அருட்சுடரே அருட்
சோதிச் சிவமே
அருள் அமுதே அருள்நிறைவே
அருள்வடிவப் பொருளே
இருள் கடிந்தென் உளமுழுதும் இடங்
கொண்ட பதியே
என் அறிவே என்உயிரே எனக்கினிய
உறவே
மருள் கடிந்த மாமணியே மாற்
றறியாப் பொன்னே
மன்றில் நடம்புரிகின்ற மணவாளா
எனக்கே
தருள் அளித்த திருவாளா ஞான
உரு வாளா
தெய்வ நடத் தரசே நான் செய்
மொழி ஏற்றருளே''

அருளுணர்வில் உள்ள மனிதன், நான் என்றும் நிலையைக் கடந்து தன்னையும், இறைவனையும் ஒற்றெனக் காணுகின்ற உள்ளத்தைத் தருவதுதான் அருட்பெருஞ் சோதியின் தனித்தன்மை. அது ''நானாய் நானதுவாய் அத்துவிதமாகி நின்றேன்'' என்று தன் அனுபவம் கூறுவார் வள்ளலார்'

இறைவனிடம் அருள் இருப்பது போல நம்மிடமும் இருக்க வேண்டும். அருளின் தனித்தன்மையை உணர்ந்து ''ஆருயிர் கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்'' என்று அவரே கூறுவார்.

இந்த அருட்பெருஞ்சோதியின் அருள் திறத்தை விளக்குவதே திரு அருட்பா. அதை விளக்கியவர் அருட்பிரகாச வள்ளலார் எனும் இராமலிங்க அடிகளார்.



### தூண்டில்காரன்

பயரியமீன் ஒன்றைப் பிடித்துப்போட ஆவல் கொண்டுள்ள தூண்டிற்காரன் தூண்டிலையும் இரையையும் நீருக்குள் போட்டுவிட்டு மணிக்கணக்காக அமைதியாகக் காத்திருக்கின்றான்: அதேபோன்று தன் பக்திச் சாதனைகளையும் பொறுமையாகப் பண்ணிக்கொண்டே போகும் பக்தன் இறுதியில் தான்தேடும் தெய்வத்தை நிச்சயமாகக் கண்டே தீருவான்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

# நன்னெறி > நல்லின்பம்




மேதகு நடுவர் எஸ். நடராஜன்

நன்னெறி என்பது நல்ல ஒழுக்கம் என்று பொருள்படுவது. ஒழுக்கம் என்பது ஆன்ருேரின் நடத்தையாகும்.

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்''

என்று வள்ளுவர் ஒழுக்கத்தின் சிறப்பைக் கூறுவதை நாம் அறியலாம். ஒழுக்கத்தைப் பற்றி உலகில் உள்ள எல்லா அற நூல்களும் வற்புறுத்திக் கூறினும், சிறப்பாகத் தமிழகத்தில் கடைச் சங்க காலத்தில் எழுந்த ''பதினெண் கிழ்க்கணக்கு'' நூல்கள் யாவுமே இதைப் பற்றியே கூறுகின்றன.

ஒழுக்கம் என்பது எதைக் குறிக்கும்? பொய் பேசாமை, மற்றவர் பொருளை விரும்பாமை பொருமை கோபம் முதலியவற்றை விடுதல், புறங்கூருமை முதலியன நன்னெறியின் பாற்படும்.

இத்தகைய ஒழுக்கம் தனி மனிதனைப் பற்றியும் சமூகத்தைப் பற்றியும் இருக்கும். ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பதால், ஒவ்வொரு மனிதனும் மகிழ்ச்சியுடனும் நிறைவுடனும் வாழ்வான். சமுதாயத்திற்காகச் செய்ய வேண்டிய கடமைகளும். அதற்காகச் சுமக்க வேண்டிய பொறுப்புக்களும் ஒழுக்கத்தில் அடங்குவன.

இத்தகைய ஒழுக்கத்தைப் பற்றித் தமிழர் வற்புறுத்தி வந்துள்ளனர். இந்த நூற்ருண்டின் இணையிலாத் தமிழ்க்கவிஞராக விளங்கிய மகாகவி பாரதியும் ஒழுக்கத்தின் சிறப்பைத் தமது கவிதைகளிலும், உரை நடைப் பகுதிகளிலும் விளக்கியுள்ளார். குழந்தைகளுக்காக அவர் எழுதிய ''புதிய ஆத்திச்சூடி'' மிகச் சிறந்த புரட்சிகரமான அறநூல் ஆகும். பொய்மைகளையும் போலிகளையும் கண்டு அஞ்சாமல் அவற்றை எதிர்த்து அழிக்க வேண்டும் என்றும், சிறிது கூடச் சோம்பல் இல்லாமல் மற்றவர்க்காகவும், தேசத்திற்காகவும் உழைக்க வேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறுகிருர்.

''கீழோர்க்கஞ்சேல், கொடுமையை
எதிர்த்து நில்,
தீயோர்க்கஞ்சேல்'' என்றும்

''நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்
குழைத்தல்
இமைப் பொழுதும் சோராதிருத்தல்''

என்றும் அவர் கூறிய கவிதை வரிகள் நமது நெஞ்சத்தை விட்டு அகலக் கூடாதவை. சிறுவயது முதலே கட்டுப்பாட்டிலும் ஒழுக்கத்திலும் வளரும் குழந்தைகள்தாம் பிற்காலத்தில் தங்களுக்கும் தாம் பிறந்த நாட்டிற்கும் பெருமை தேடித் தருவார்கள்.

ஒழுக்கம் நமக்கு ஓர் அரண் - பாதுகாப்பு. இந்த அரண் அன்பு வழியால் ஆனது. அன்பை அடிப்படையாக வைத்துக் கட்டிய கட்டடமாகும். அன்பும், அறமும் மனித வாழ்க்கையின் இரண்டு கண்கள். அறத்திற்கு அன்பும், அன்பிற்கு அறமும் உறுதுணை செய்யும். இந்த இரண்டும் உடையவனை உலகமெல்லாம் விரும்பும்; சிறப்புக் கொடுக்கும்.

இத்தகைய ஒழுக்கத்தை நமது முன்னோர் யாவரும் பின்பற்றினர். குறிப்பாகச் சமயத்தில் ஒழுக்கத்தின் இன்றியமையாமையை எடுத்துக் கூறியுள்ளனர். ஏனெனில், இறைவனைப் பணிவதற்கு இந்த ஒழுக்கத்தால் ஆகிய ஒருமைப்பாடு மிகவும் அவசியம்.

சைவ சமயத்தில் கூறப்படும் நால்வருள் திருநாவுக்கரசருக்குத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. அதுதான் அவர் தமது உழவாரப் படையைக் கொண்டு கோயில்களுக்குச் செல்லும் வழியைச் செப்பனிட்டார். தான் பெரிய பக்தராக இருந்தும், ஆயிரக் கணக்கில் தேவாரம் பாடும் நாவரசராக விளங்கினும், மக்கள் யாவரும் வந்து வழிபடுவதற்குப் பாதையையும் சுற்றுப்புறங்களையும் திருத்தியமைத்தார் என்றால் அவரது தொண்டு உள்ளத்தை எவ்வாறு பாராட்டுவது? அங்கே நாம் காண்பது அன்பும் அறனும் மட்டுமல்ல, எல்லாவற்றிற்கும் மேலாக அடக்கம் என்னும் பண்பாகும்.

எல்லாச் செல்வங்களும் படைத்தவர்களுக்கு இருக்க வேண்டிய மற்றொரு செல்வம் அடக்கமாகும் என்று வள்ளுவர் பெருமான் கூறுவது நினைவு கூரத் தகுந்ததாகும்.

வாழ்க்கையில் நம்மால் முடிந்த உதவியை மற்றவர்களுக்குச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்ய இயலாத போது தீமை செய்யாமலாவது இருத்தல் வேண்டும். இதுவே நம்மை நன்னெறிக்கு உய்ப்பதாகும். இதனையே சங்க காலத்து எழுந்த புறநானூறு.

''நல்லது செய்தல் ஆற்றிராயினும்
அல்லது செய்தல்
ஓம்புமின் அதுதான் எல்லாரும்
உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படுவம் நெறியுமாலதுவே''

என்று வரையறுத்துக் கூறுகிறது.

ஆதலின் அன்பும், அறமும், எல்லாவற்றிற்கும் மேலாக அடக்கமும் ஒழுக்கத்தின், நன்னெறியின் முக்கியமான ஆதாரங்கள் என்பதை மறத்தல் கூடாது. இதுவே வாழ்க்கைக்கு வழிகாட்டுவது, நல்லின்பம் தரும் நன்னெறி ஆகும். ★

## பகுத்தறிவும் கற்பனையும்

சாக்ரடீஸ் என்ற கிரேக்க ஞானி பகுத்தறிவுவாதி தான். 'நாத்திகன்' என்று ஏதென்ஸ் நாட்டவரால் குற்றஞ்சாட்டப் பட்டவனுமாவான். அவன்கூட, ஏதென்ஸ் நகரைத் தாயாகக் கற்பனை செய்திருக்கிறான்.

என் தமிழ்நாட்டு இளைஞர்களை வேண்டுகிறேன்: பகுத்தறிவு வாதம் பேசிக் கற்பனா சக்தியை இழந்துவிடாதீர்கள்! பாரதியார், பாரத நாட்டை மாதாவடிவில் கண்டு வழிபடப் பாடல்கள் புனைந்திலையானல், சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள சாதாரண மக்களை விடுதலைப்போரில் ஈடுபடுத்தியிருக்க முடியாது. — ம. பொ. சி.

(பாரதியார் பற்றி ம. பொ. சி. பேருரை : பக்கம். 70)

# ஆன்மப் பறவைகள்




**சாலமன் பாப்பையா**
அமெரிக்கன் கல்லூரி, மதுரை

இன்றைக்கு ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு வண்டு இனங்கள் பொழில்களில் கூடுகின்றன; மயிற் கூட்டங்கள் தரையில் ஆடுகின்றன; மேகத் தொகுதிகள் மரங்களை மூடுகின்றன, கோல இக்காட்சியில் குயில் தன்னை மறந்து பாடுகிறது! கங்கையினும் தூய காவிரியின் பொங்கும் வெள்ளம் புகுந்து போகும் பூம் பொழில் சோழ நாடு அது.

காலைப் பொழுது; கதிரவனைக் கிழக்குத் திசையில் உலகு காண்கிறது. கன இருள் கழிகிறது; மலர் எல்லாம் மதுத் துளிகளைச் சிந்துகின்றன. முல்லை மலரைத் தொட்டுத் தொடர் கதை பேசி மாருதம் நடமிடுகிறது. மலர்ப் படுக்கையை மறந்த அன்னங்கள் பனியில் நனைந்த தம் சிறகினை உதறி எழுகின்றன. வெளியைக் கிழித்து, ஒளியை நிரப்பும் சுடர்க் கற்றைகள், சோலைக் கமுகின் மடலைக் கீறி, அதன் வளம் மிக்க பாளைகள் மணக்க ஊடுருவுகின்றன. திசை எங்கும் தெரிந்த நட்சத்திரக் கூட்டம் ஒளி மங்கி விழி மூடுகின்றன.

மாடு மேய்க்கும் ஆயர், குழலில் இனிமை கூட்டுகின்றனர். அவ்வினிமையோடு காளைகளின் கழுத்து மணி போட்டியிடுகிறது. ஆற்று நீர்ப் பெருக்கில் அக மகிழ்ந்து ஆடி முடித்த துடி இடைப் பெண்டிர், தம் சுருண்டு நனைந்த கூந்தலைப் பிழிந்து, உதறித் துணி உடுத்துக் கரை ஏறுகின்றனர். ஆம்; இயற்கையின் அனைத்துப் பக்கங்களிலும் மகிழ்ச்சியின் எழுத்துகள் பதிவாகிக் கொண்டு இருக்கின்றன. கண்ணையும் கருத்தையும் கவரும் இக்காட்சிகளில் உலகம் வயப்பட்டுத், தன்னை மறந்து. தடுமாறிக் கொண்டு இருக்கிறது. எங்கும் இனிமை; இனிமையே. ஆனால் அதோ! அது என்ன? ஓர் உயிரின் அழுகைப் புராணம் காற்று வெளியில் கலந்து வருகிறதே; அது ஏன்?

மெல்ல நகர்கிறோம். நிலவைப் பழிக்கும் நெடுஞ் சுவர் மாளிகை. நிற்கிறோம். அழகின் வயப்பட்டன்று; அழுகைப் புராணம் அங்கிருந்தல்லவா வருகிறது! கூர்ந்து கேட்கிறோம்; பார்க்கிறோம். அது தேவ தேவியின் மாளிகை. கலையையும், உடலையும் காசிற்கு விற்கும் அங்காடி அல்லவா அவள்! அவள் வீட்டிலா அழுகை? குரல் அவளுடையதாக இல்லையே? பார்த்து விடும் பரபரப்பு நமக்கு. உள்ளே நுழைகிறோம். பளிங்கு முற்றம்; பாய் கிடக்கிறது; அதன்மேல் ஓர் உருவம்; விழியிற் செந்நீர்; மொழியில் வேதனை; அழுகை கவிதை ஆகிறது.

'பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான்
பெரியதோர் இடும்பை பூண்டு'

என்ன இது? உறங்கக் கிடத்திய பிள்ளைக்கு ஒப்பாரி பாடிய கதை! எங்கே, எப்போது, எதைப் பாடுவது என்று தெரிய வேண்டாம்! யார் இந்த உருவம்?

ஓ! இவர் தானா? மலர்த் தோட்டம் வைத்துத் திருமாலின் மேனியை மணக்க வைக்கப் போவதாய் மன உறுதி கொண்டு உழைத்தவர் அல்லவா இவர். ஆம்; அவரே தான். மலர்த் தோட்டம் வைத்தவர். இன்று மங்கையின் மலர் நாட்டத்தில் சிக்கிக் குணம் கெட்டேனே எனக் குமுறிக் கொண்டு இருக்கிறார். விந்தைதான் இது! அவர் கூறுவதையுங் கொஞ்சங் கேட்போமா?

'காக்கைகள் குளிக்கின்றன;
கமலங்கள் விழிக்கின்றன;
கண்டவர் உள்ளமோ களிக்கின்றது;
நானோ, குளித்து
அங்கி காக்க வேண்டிய அந்தணன்;
ஆன்ம அறிவும் அற்றுப்
பக்தியும் இன்றிப்
படுத்துக் கிடக்கின்றேன்'[9]
இருந்த நிலமும் என்வசம் இல்லை;
பொருள் இருந்தால் உறவு வரும்;
நண்பர் எப்போதும் வருவர் என்பர்
எனக்கு அவர்களும் இல்லை.[10]
இப்போது நான் இருக்கின்ற இடமோ
தவ வயப்பட்டு வாழ்வார்தம் இல்லம் அன்று;
உலகிற் கெலாம் பெருந்தனமாய
உன்னைப் பிடித்து வாழும்
பெரியவர் வீடும் அன்று;
விரித்த கூந்தலும்
சிரித்த உதடும், உயிர்
பறிக்கும் கண்ணும் படைத்த
பரத்தையர் வீட்டில்
படுத்துக் கிடக்கின்றேன்.
பொய்யை நிறையக் கட்டிப்
போக்கிடம் அற்றவனாய் அன்றோ இருக்கிறேன்!!
ஆகா! நான் நந்தவனம் அமைத்த
நாடகம் என்ன!
மாலை தொடுத்த ஜாலம் என்ன!
மயங்கிக் களித்த கோலம் என்ன!
திருமாலைத் தொண்டிலா
வருநாளைக் கழித்தேன்?
கன்னியர்தம் கள்ளத் தேனில்
கழிக்கும் கள்ளத்தேன்
மான் கன்றின் மணிப் பார்வைப்
பெண்டிர் மையலில் சிக்கினேன்.[12]
கடல்நிறக் கடவுள் எந்தாய்!
பச்சை மாமேனி? பவள வாய்!
கமலச் செங்கண்
அச்சுதனில் இச்சை வைக்காது
கொச்சைப் பட்டுப் போனேனே!
மாதெனும் மதுவின் மையல்
மனமெலாம் வழிந்து பொங்கப்
போதெலாம் போக வாழ்வில்
போக்கியே நொந்து கெட்டேன்.
ஆதலால், அமரர் ஏறே!
ஆயர்தங் கொழுந்தே![13]
என்றன் போதையை நீக்கி
உன்றன் புண்ணியப் பாதம் சேர்ப்பாய்
தாயுமாய்த் தந்தை தாமாய்த்
தாங்கிடும் தவமே! என்றன்
மாயவாழ் வனைத்திற் சேர்ந்த
மாசெலாம் போக்கி, என்னை
ஏ! நீ நம்பையன் என்றே
இரு கரம் நீட்டிக் கூட்டிப்
போனகம் செய்த சேடம்
புகும்படிச் செய்யலாமே;
செய்வாயா?

அழுகை முடியவில்லை. அது ஓலப் பெருங் குரலாய் உலகின் முகடுகளில் முட்டிச்சிதறு கிறது. உற்றுப் பார்க்கிறோம். அழுவது வேறு யாருமல்ல; அவர்தான் தொண்டரடிப் பொடி ஆழ்வார்! தொல் பிறவி தவிர்த்த வீரர்! வியப்பின் வயப்பட்டு நடையின் திசையை மாற்றுகிறோம்; காலத்தையும் கடக்கிறோம்-

கல்லும், மணல் வெளியும், கணக்கற்ற பாறைகளும் எனச் செல்லும், சுடுகின்ற வெளி கடந்து, வழி காண்கிறோம் எருசலேம் நகரம்; யூதேயா நாட்டின் தலை நகரம். குறுகி, நீண்டு, வளைந்து, விரிந்து செல்லும் வீதிகள். வீதி எங்கும் சோக விழிகள். ஏன் இப்படி? அதோ, அங்கே பெருங் கூட்டம்! அது அந்த நாட்டின் மன்னனின் வீடு. அவ் வீட்டின் முன் அசையா உதடும் நிமிரா முகமும், விரியா விழியும் படைத்த மனிதச் சந்தை, சோகத்தை ஏகமாய் விற்பனை செய்து கொண்டிருக்கிறது. விற்பவரும் அவரே; வாங்குபவரும் அவரே. எவரும் பேசுவதாக இல்லை. பேசினால் அல்லவா சோகத்தின் விலை என்னவென்று கேட்கலாம். மெல்ல வீட்டிற்குள் செல்கிறோம். அரச குடும்பத்தின் ஆடம்பர மங்களங்கள் அவல நிழலில் ஒளிமங்கிக் கிடக்கின்றன.

பிறந்து சில நாட்களே ஆன குழந்தை ஒன்று விரிப்பில் கிடந்து, வேதனையில் துடிக்கிறது. மன்னன் வீட்டு மழலை; அதுவும் தலைப் பிள்ளை. கேட்க வேண்டுமா! குழந்தையைச் சுற்றி ஒரே கூட்டம்; காக்கவும் கண்ணீர் வடிக்கவும்! கலங்கிப் போகிறோம் ஆமாம்; மன்னன் எங்கே? தேடுகிறோம். அதோ அந்தத் தனி அறையில் ஏதோ ஓசை வருகிறதே! ஒட்டுக் கேட்போமா? பூட்டிய அறையில் நாட்டின் மன்னன் அழுகிறான். அவன் அழுகையின் சொற்களைக் காற்று அள்ளி வந்து நம் செவிகளில் நிறைக்கிறது. மன்னன் அழலாமா? அதுவும் இந்த மன்னனா? சிங்கத்தின் வாயில் சிக்கிய ஆட்டையும் தன் செயல் திறம் மிக்கக் கைகளால் மீட்ட வரலாறு இவனுக்கு உண்டே. ஒன்பதரை அடி உயரமும், நெசவுகாரரின் தறிமரம் போன்ற ஈட்டியும் உடைய கோலியாத்து என்ற வீரன்; பகைக் கடலைக் கடக்கும் பயங்கரச் சூறாவளி; அவனை எந்த ஆயுதமும் இன்றிச் சந்தித்து ஒரே கல்லில் வீழ்த்திய விவேகமும் வீரமும் இந்த மன்னனுக்கல்லவா சொந்தம். இவன் ஏன் அழுகிறான்? என்ன சொல்லி அழுகிறான்?

'என் ஆண்டவா! என் இறைவா!
எழும் பகலில் உம்மை அழைக்கிறேன்;
இரவிலும் உம் திருமுன் அழுது
புலம்புகிறேன்;
என் வேண்டுதல் உம்முன் வரட்டும்;
இளமையில் நான் செய்த
பாவங்களையும் குற்றங்களையும்
எண்ணிப் பாராதிருப்பீராக.
என் பாவம் பெரியது.
வெட்கம் என்னை
முகங் கவிழச் செய்கின்றது.
என் குற்றத்தை
நான் ஒப்புக் கொள்கிறேன்.
கூவிக் கூவிக் களைத்து விட்டேன்;
என் தொண்டையும் வறண்டு
போயிற்று;
என் இறைவன் துணையை எதிர்
பார்த்துப் பார்த்து
என் கண்களும் பூத்துப் போயின'

மன்னனின் அழுகை ஒலி, சுவர்களில் மோதிச் சரிகிறது. குழந்தையின் வேதனைக்கும், குற்றங்களை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று இவன் கூறுவதற்கும் உள்ள தொடர்பு என்ன? தொடர்பில்லாமல் இல்லை. அந்தத் தொடர்பில் தான் தொலை தூரத்திலும் ஒரு தொண்டர் அடிப்பொடியைக் காண்கிறோம்.

'ஆண்டவரே! உம் வழியை எனக்குக் கற்பித்தருளும்' என்று ஒரு காலத்தில் ஆனந்தமாய்ப் பாடி அலைந்தவன் தான் அவன். ஆனாலும் ஒருநாள் பிற்பகல் வேளை; மாலைப் பொழுது, மயக்க மகரந்தத்தை மனித மன மலர்களில் நிறைத்துக் கொண்டிருந்தது. அரண்மனை மாடி; மன்னன் உலா பயில்கிறான். எதிர் வரிசை

யிலும் மாடி; அங்கே மாது ஒருத்தி உடல் மாசு போகக் குளித்துக் கொண்டிருந்தாள். அவள் மேனி மாசு போய்க் கொண்டிருந்தது; அங்கே மன்னன் மனத்திலோ மாசு ஏறிக் கொண்டிருந்தது. அவள் அழகு அவன் இதயத்தைச் சூறையாடியது. அவனோ அவளையே சூறையாடி விட்டான். அவளோ மணமானவள். அவள் கணவனோ, எந்த மன்னனின் இச்சைக்கு அவள் இணங்கி னாளோ அவனுக்காகப் போர்க்களத்திற்குப் போய் இருக்கிறான். கணவன் இல்லாத வேளை; கருவுற்று விட்டாள் மனைவி. காலம் காலனாகச் சேதி சொன்னது.

செய்தி அறிந்த மன்னன் சித்தம் கலங்கிப் போனான். குற்றம் தெரிந்து சத்தம் பெருகு முன்னே தான் சுத்தாமவது எப்படி என்று எண்ணினான். எழுதினான் அவள் கணவனைத் தன்னிடம் அனுப்பி வைக்கும் படி. வந்தவனை வரவேற்று, இல்லத்திற்குப் போய் இரவில் தங்கி, மறுநாள் வா என்றான் மன்னன். அன்று இரவு அவன் தன் மனைவியோடு தங்கி விட்டால் பிள்ளைக்குத் தகப்பன் பிறகு அவன் தானே. மன்னன் அல்லவா; மகத்தான திட்டம் தீட்டி விட்டான்! திட்டம் செயல்பட வேண்டுமே?

கணவனோ, எதிரில் இருந்த தன் இல்லத்திற்குப் போகாமல் அரசன். வீட்டு முற்றத்திலேயே படுத்துக் கொண்டான். இல்லம் எதிரில் இருக்க அங்குப் போகாமல் இங்கேயே தங்கி விட்டது ஏன் என்றான் மன்னன். கணவனோ, 'என் நண்பர்கள் நாட்டிற்காகவும் மன்னனுக்காகவும் சாவுடன் விளையாடிக் கொண்டிருக்க, எனக்கு மட்டும் உரியவளுடன் உறவா? மாட்டேன்; இது மன்னன் உயிர் மேல் ஆணை' என்று சொல்லி விட்டான். 'நல்லது! நாளைக்கும் இங்கேயே இரு' என்ற மன்னன் படுக்கைக்குப் போனான். ரோஜாவின் மஞ்சந் தான் அது; அன்றோ, அது சப்பாத்திக் கள்ளியாய்க் குத்தியது புரண்டு கிடந்தான்; புதிய திட்டமும் பூத்தது.

மறுநாள்; இரவு உணவு நேரம். கணவனும் மன்னனுடன் உண்டான். நல்ல உணவும், நங்கையரை நினைப்பூட்டும் மதுவும் வேண்டும் மட்டும் கொடுத்தான். போதை, மாதைத் தேடாதா? தேடவில்லை. மறுபடியும் மன்னன் வீட்டு முற்றத்திலேயே படுத்துக் கொண்டான்.

விடிந்தது, மன்னன் மனம் விடியாமல் இருண்டு கிடந்தது. இருட்டு, திருட்டிற்கு வழி வகுத்தது. மன்னன், கணவனிடம் ஒரு கடிதங் கொடுத்து படைத் தளபதியிடம் அனுப்பினான். 'கடுமையான போரில் அவனை முன்னே நிறுத்திக் கொல்; கடிதத்தின் வாசகம் மறுப்பின்றி நிறை வேற்றப்பட்டது. விதவை என்ற பெயரில் எதிர் வீட்டு அழகி அரசனின் அந்தப் புரத்தை அலங்கரிக்கும் கொடி ஆனாள். எவரும் ஏன் என்று கேட்கவில்லை. அது அந்த நாட்டின் வழக்கம். அப்படிப் பாவத்தில் பிறந்த குழந்தைதான் அங்கே சாவோடு போராடித் தோற்றுக் கொண்டு இருக்கிறது. தன் பாவத்தால் ஓர் இளந்தளிர் சாவைத் தழுவுவதா? நினைவே மன்னனை வாட்டுகிறது. அழுகிறான் அவலங் கொப்பளிக்க; புலம்புகிறான் கண்ணீருடன். அப்போது பொங்கிய கவிதைதான் அழுகைப் புராணமாய்க் காற்றில் கரைகிறது. அவன் தான் தாவீது என்ற மன்னன்.

எங்கும், எப்பொழுதும் இறைவன் உண்டென்று, பொங்கும் கவிமழையில் புகுந்தாடித் திளைத்தவர்தாம் தொண்டரடிப் பொடி ஆழ்வாரும், தாவீதும். ஆனாலும் சங்குக் கழுத்தழகில் சரியாக மாட்டிக்கொண்டு சரிந்து கிடக்கின்றனர். சரிந்தாலும், வருந்தித் திருந்தினர்; சீரழிவு வருமுன் சிந்தனை வயப்பட்டு நொந்தனர் தம்மை. தவறுக்கும் நியாயம் கற்பிக்கும் தந்திர வழியில் தருக் கினார் அல்லர். மாறாக, மந்திரச்சொல்லால் மனத்தையே கரைத்து மாதவனைத் தொழுது, அழுதனர். கெட்டோம் என்று தெரிந்த உடனேயே விட்டனர் ஆசையை; மன வேதனை முறுக்கக் கவிச்சாதனை செய்தனர். அவர்தம் ஆன்மா, வேதனைகளால்

நொறுக்கப்பட்டது; மனது, கண்ணீர்த் துளிகளால் தன்னைக் கழுவிக் கொண்டது. இந்தப் பாவத்திலிருந்து விடுபடும் வழி இறைவனைப் பற்றுவதே என முடிவு செய்தது. அதனால்

'உய்யப்போம் உணர்வி னார்கட்கு
ஒருவன் என்றுணர்ந்த மின்னை
அய்யப்பாடு அறுத்துத் தோன்றும்'
'மாசற்றார் மனத்து ளானை
வணங்கி நாம்இருப்ப தல்லால்
பேசத்தான் ஆவ துண்டோ?
பேதை நெஞ்சே நீ சொல்லாய்'

என்று தொண்டரடிப் பொடி ஆழ்வார் வாழ்வின் இரகசிய வழியை அறிந்து பயணத்தைத் தொடங்கி விடுகிறார்.

'எனக்கு அடைக்கலமும்
என் மீட்பவருமான ஆண்டவரே!
உம் முன்னிலையில்
என் வாய் மொழியும்
என் இதயச் சிந்தனையும்
உமக்கு உகந்தன ஆகட்டும்'

என்று தாவீது மன்னன் புதிய பாதையில் புறப்படத் தொடங்கி விடுகிறான். ஆம்; அவ்விருவரும் ஆன்மப் பறவைகள்; அவர்கள் இந்த மண்ணில் வேறுபட்டுக் கிடந்தாலும் அவர்கள் பயணம் என்னவோ ஒரே வான வெளியில்தான்.

மேற்கோள்கள்

திவ்வியப் பிரபந்தம் 885, 894, 917, 918, 919, 920, 926, 876, 896, 900, 907, 873, 886, 893.

சங்கீதம் 87 : 1-3; 24 : 7; 11; 42 : 15; 37 : 18; 68 : 3; 18 : 14. ★

### பூசாரி

''மிருக நிலையிலிருந்து மனிதரைத் தேவ நிலையில் கொண்டு சேர்க்கும் பொருட்டாக ஏற்பட்ட தேவப் பள்ளிக்கூடங்களே கோயில்களாம். இதைப் பூசாரிகள் மறைக்கிறார்கள்.

''கும்பிடுவோர் நித்ய அடிமைகளாகவும், தெய்வாம்சம் உடையோர் தாமாகவும் இருந்தால் நல்லதென்று பூசாரி யோசனை பண்ணுகின்றான். பிறரை அடிமை நிலையில் வைக்க விரும்புவோரிடம் தெய்வாம்சம் ஏற்படாது. அப்படியிருக்கப் பல பூசாரிகள் தம்மிடம் தெய்வாம்சம் இருப்பது போலவே நடித்து ஜனங்களை வஞ்சனை செய்து பணம் பிடுங்குகிறார்கள்''.

— மகாகவி பாரதியார்

(''இனி'' என்ற கட்டுரையில்)




# நமக்கிது நன்னெறி

கி. வா. ஜகந்நாதன்

எந்நெறியிற் சென்ருலும் இறைநெறியை மறவாமல்
இயங்கும் அந்தச்
செந்நெறியை வற்புறுத்தித் தமிழ்வளர்த்துக் கோவையினில்
திகழா நின்ற
நன்னெறிசேர் கழகத்துப் பணியாற்றும் நண்பர்கட்கென்
நமஸ்கா ரங்கள்.
இன்னெறிசேர் பக்திவிழா நிகழ்ச்சியினைக் கண்டுமகிழ்
வெய்தி னேனே. 1

திங்களெலாம் இறையுணர்வும் செந்தமிழும் சேர்கின்ற
திருவி ழாக்கள்
மங்கலின்றிப் பலசெய்யும் நும்முடைய தொண்டருமை
வாழ்த்து கின்றேன் ;
அங்கணுல கத்தவர்கள் வெவ்வேறு தெய்வத்தை
அன்பிற் போற்றிப்
பொங்குமின்பம் பெற்ருலும் பக்திஎனும் உணர்வெங்கும்
பொதுவாம் அன்றே 2

இத்தகைய பேருண்மை தனையறிந்து சைவத்தும்
எழிலார் மாலின்
பத்திசெயும் வைணவத்தும் இசுலாமி யச்சமயத்
தினிலும் மேற்கே
ஒத்தமையும் கிறித்தவத்தும் உறுநூல்க ளிற்பத்தி
உணர்த்து மாற்றை
வித்தகமாய் எடுத்துரைக்கும் விற்பனரை மாலைபோல்
மேவச் செய்தீர் 3

காந்தியுகத் தினில்வாழும் நமக்கிதுவே நன்னெறியாம் ;
கடவுள் தன்னை

ஏந்துமுளப் பத்தியினல் எவ்வுருவில் எம்முறையில்
ஏத்தினுலும்

போந்தமையும் பயனுண்டாம் ; பலபலவாம் சமயத்தும்
புவியோர் ஏத்தும்

சாந்தகுணச் செம்மலர்கள் பலரிருந்து நலஞ்செய்து
தழைத்தா ரன்றே. 4

மங்கலம்பூண் டுயர்மாது மற்றொருசு மங்கலியை
வாழ்த்தி அன்பு

தங்குறவே நண்புசெய்வாள்; அவள்தனது கணவன்பாற்
சார்கி லாளென்

றங்கவள்பால் பசைகொள்ளாள்; அந்நிலையை யும்விரும்பாள்;
அதுபோல் நந்தம்

புங்கமுறு கடவுளினிப் போற்றிஏ னைமதத்தோர்
பொற்பும் காண்போம் 5

தஞ்சமயத் தினிலொழுகிப் பிறர்சமயப் பகையின்றிச்
சாரும் வாழ்வே

எஞ்சலிலாச் சமரசமென் றியம்பினர் முன்னோர்கள்;
இந்த வண்ணம்

நெஞ்சிலன்பு கொண்டுபக்தி விழாநிகழ்த்தும் நுமைப்புகழ்ந்தேன் ;
நித்த சுத்தன்

தஞ்சமடை வோர்புகலாம் இறைவனரு ளால்விழாத்
தழைக வாழி ! 6





# நன்னெறிக் கழகம் வாழ்க!

சௌந்தரா கைலாசம்

ஓம்
நமச்சிவாய வாழ்க!

புவனங்கள் நடைபயிலப் பாதை போட்ட
புனிதமனப் பெரியவர்கள் பிறந்த நாட்டில்
அவலங்கள் தலைதூக்கி ஆடி நெஞ்சில்
அச்சத்தை வளர்க்கின்ற கொடுமை கண்டு
தவறெங்கே உள்ளதென ஆய்ந்து பார்த்துத்
தக்கவிதம் செப்பனிட்டு நமது வாழ்வில்
உவரெங்கும் இல்லாமல் இனிமை கூட்ட
உதவிடுநன் னெறிக்கழகம் உயர்ந்து வாழ்க!

தேவைகளை மறந்துவிட்டு, வளரும் வாழ்வின்
சிந்தனையை மறந்துவிட்டு மண்ணால் ஆன
பாவைகளாய்ப் பாமரராய் உயிரைத் தாங்கும்
பாரதத்தின் மைந்தர்களைக் காப்பதற்குக்
கோவைநகர்ப் புறத்தினிலே அமைந்து நல்ல
கொள்கையினால் அறிவொளியைவிரித்து நித்தம்
சேவையினைச் செய்துவரும் கழகம் அந்தத்
திருமருத மலைமுருகன் அருளால் வாழ்க!

where the temple of Murugar was enshrined on the top of a hillock. This is called Viralimalai and it is full of peacocks which is one of the birds favourite to Lord Murugar. It has been ordained and it is now also in force that no one should shoot and kill them within a radius of 10 miles. While he was approching Viralimalai a pious agriculturist had a dream. A Sanyasi appeared in the dream and asked him to provide food to the 'Gurus' who would be coming to his residence the following morning. The agriculturist woke up from his dream. The Saint came and he welcomed them with all honours. Then the agriculturist realised that the Sanyasi who appeared in his dream was Lord Murugar himself. Sages and Rishis resided there and so they compelled the Saint to stay with them for a few days He acceded to their request. There after the Saint left for Rameswaram. After a short stay he once again returned to Trichy. The uncle of the Saint was searching and was trying to find out the saint. When he met him he compelled the Saint to get wedded. The Saint was reluctant as he had to get involved in the shackles of wedded life. The Saint went to Vedaranyam and met his mother. The Saint remembered the teachings of Saint Mouna Guru Desikan. Therefore he agreed. So he got wedded and spent his life with his wife. A child was born and then his wife also expired. Then the Saint took efforts to give proper education to his son.

Though involved in domestic life he continued to be devotional and was daily offering prayers. His mother also expired. He was not perturbed and resigned himself to the will of the Lord. Anyhow he intensely aspired to become a 'Sanyasi' which he considered to be the best method to attain the Feet of the Lord.

Saint Mouna Gnana Desikan was extremely delighted to see the Saint having reached "those heights himself through devotion and mystic institution" The Guru adopted the Saint as his desciple and then he took leave of him.

Saint Thayumanavar became a Sanyasi and was visiting shrines. Then he went to Rameswaram. There was no rain for a long time and saw their plight. He sang a devotional song. Immediately there was torrential rain.

He returned to Trichy and stayed in the same Mutt, After the expiry of his Guru he became the president of the Mutt. By his medidation and prayers he was able to lift himself from the slough of Despond to the Sunny Heights of spirituality where Supreme Peace and unencellable Happiness - 'Ananda' - prevails. Then he left for Ramanathapuram. One strange woman welcomed him with all divinity. He sank a well and developed a park. There was a tamarind tree. The Saint resided there and was involved in deep medidation under the tamarind tree. Day by day his meditation intensified. He dived deep into the flood of Beatitude and cast away his physical coil in the year of grace 1662 in January in the star of Visaka.

There is a tradition set afloat. He was in deep meditation. A villager who was grazing the cattle reported the matter

to the local chieftain. Thinking he was dead the Chieftain ordered to set fire to the holy body. When the body was set ablaze the Saint having been disturbed in contemplation woke up He cursed the person who was responsible for the disaster. Then he attained 'Samathi'. This tradition is contrary to the faith and belief of the Saint that the Saint had a universal love for Humanity. So this tradition is not to be believed.

Another Saint called Kudikarai Gnani affirmed that he had seen that the Saint had attained Samathi and the body was not set ablaze.

The place where he attained Samathi is called 'Lakshmipuram'. Every year in the month of January in the star of Visakan, Swami Chidbhavananda who belongs to Sri Ramakrishna Mission and who has established Sri Ramakrishna Tapovanam, Tiruparathuri, Trichi celebrats annually. Poojas, Prayers, Anthar yogas are done.

Saint Thayumanavar has attained the bliss of Sarvagnana and got merged in the ultimate reality. He has composed 1452 verses sung in various places, shrines and temples. He could have sung more but we are able to get only these 1452 verses.

His verses are couched in simple language, except a few, to be easily comprehended by lay man. Swami Chidbhavananda has published his lucid commentary on 76 verses in 7 books. But for the exposition of Swami Chidbhavananda's commentary some of the verses cannot be easily understood.

In all his songs his teachings are noble acceptable to all and to all religions. He has identified a human being with a 'Mobile Temple', which is the preaching of Saint Thirumoolar.

He emphasises that Lord is one' Supreme Lord. According to him there is no worship of a personal God. All, whether rich or poor, are before the Unseen Power. His songs are microscopic and telescopic to bring into vision of the Infinite Being. He preaches the Universal Religion and the Divinity of the Universe overwhelms all minds. This Divinity is Infinite Effulgence.

Some of his songs may be cited to confirm his faith and compassion towards all. The content of his songs can be given; but it is not possible to bring out the rhythmic and forcible effect of those even if they were to be transliterated.

Distintive Religions if probed
Sing the Glory of One Lord,
Thy Ieelas,
No distinctions in creed and
dogmas,
Supreme characater of Thy ineffable
grace of glory preaches my
conclusion.
Is there anything profitable
By propogating that there are
Two Gods, three Gods, or five Gods
Therby you confound yourselves'
There are different religions

Each religion maintains that it
has its own Deity
Controversy arises there among
them
No beginning or No end to
this problem'.

Anyone who casts off his worldly conflicts concentrates on one Supreme Divinity gets Eternal Peace.

- Thus the Saint implores the Divine Grace and Glory. According to him God is one whatever be the name by which He is called. But on the other hand people indulge in recrimination.

He explains if we deeply think of our life all living beings from grass to Brahman owe their existance to the Supreme Lord.

In one of his teachings he says
"That every human being should show Mercy and Sympathy
to all Living Beings

Oh! Lord! Give me that mind
The compassion towards all without distinction of caste and colour, clime and country genius brineful of Beauty and Glory

The Saint condemns

No Limit to the aspirations: Ruler of the World desires to rule over the Ocean.

Contemplation will end in satisfying the appetite; Eating;

Sleepeth; Therefore one should be content with what he has"

The Saint all through his songs cries
Religion is Universal :
"There is one God ; one should have compassion to all.

One should have auspicious attributes free from all imperfections
while trekking along the Devotional path

All praises of Lord never surfeits
Percepation of Ananda Jothi emerging as universal Being.
Rising to the Heights of Glory"

All verses are full of Beauty, Bhakthi and Glory. He lits the Lamp of Grace in all of us. He has guided all of us to attian Sirvagnana.

His influence is ineffable and unobstrusive. His verses inspire confidence in us and illumines and cleanses our mind. We are able to discard all our wicked propensities. Thus we gain piety and humility. His forcible call guides us to march along the righteous path to attain the Bliss of Ananda Jothi.




# சான்றோர் கண்ட ஒருமைப்பாடு

ம. ரா. போ. குருசாமி

வாழ்க்கையின் எதிரொலியாகவும் மறுபதிப்பாகவும்தான் நூல்கள் உருவாகின்றன. எனவே, ஏடுகள் வாயிலாக நாடுபற்றி அறியமுடியும்; நாடு போகும் போக்கிலிருந்து ஏடுகளையும் கணிக்க முடியும் நாடும் ஏடும் ஒன்றுக்கு ஒன்று இணைந்தும் பிணைந்தும் அமைவது இயற்கை.

''இமயம் முதல் குமரி வரை'' என்ற உணர்வு பாரத நாட்டில் என்றும் எங்கும் பரவலாக இருந்துவருகின்றது. இந்த உணர்வு எந்தக் காலத்தில் தொடங்கியது என்று வரையறுத்துச் சொல்லிவிட முடியவில்லை; தொன்றுதொட்டு இந்த நாட்டில் இருந்து வருகின்ற ஒரு நல்லுணர்வு இந்திய ஒருமைப்பாட்டுணர்வு.

தமிழிலே கிடைக்கும் நூல்களிலே பழமையானவை பாட்டும் தொகையுமாய் உள்ள சங்க இலக்கியங்களே யாகும். பத்துப்பாட்டில் ஒன்றான 'மதுரைக் காஞ்சி'[1] யில்

தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லைத்
தொன்று மொழிந்து தொழில் கேட்ப
வெற்றமொடு வெறுத்து ஒழுகிய
கொற்றவர்தம் கோன் ஆகுவை'

என்ற வரிகள் காணப்படுகின்றன. இந்த வரிகளில் குமரியையும் இமயத்தையும் எல்லையாகக் கொண்ட பெரும்பரப்பில் ஆளும் மன்னர்களுக்கெல்லாம் பெருமன்னனாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் குறிப்பிடுகிறார்.

இமய வரம்பன் — அதாவது இமய மலையினையே தன் நாட்டின் வரம்பாகக் கொண்டவன் — என்ற பெயருடைய ஒரு சேரமன்னனைக் குமட்டூர்க் கண்ணனார்[2] பாடியுள்ளார். அந்தப் பாடலில்[3] 'பெரும் புகழ் கொண்ட இமயத்துக்கும் தென்திசைக் குமரிக்கும் இடையில் ஆண்ட மன்னர்களின் மிகுபுகழ் சான்ற வீரமழிய வென்ற'வனாக அம்மன்னன் குறிக்கப்படுகிறான். கடவுளர் நிலைத்து வாழும் இமயப் பெருமலையை வடக்கு எல்லையாகவும் குமரியைத் தெற்கு எல்லையாகவும் கொண்ட பரப்பில் பல மன்னர்களின் நாடுகளைப் போரால் அழித்து வெற்றி கொண்டவன் என்று கடல் பிறக் கோட்டிய குட்டுவனைப் பரணர்[4] குறிப்பிடும் பாடலும் சங்க இலக்கியத்தில் உள்ளது. வடக்கையும் தெற்கையும் இணைத்துவிட்ட யாகச் சடங்கின் புகழாலேயே 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்று ஒரு பாண்டியன் விளங்கிய செய்தியைப் புறநானூறு நமக்கு வழங்குகின்றது. பனி மயமான பெருமலையை வடக்கிலும், அச்சமூட்டும் குமரியினைத் தெற்கிலும், அலை மோதி அரிக்கின்ற கடலினைக் கிழக்கிலும், பழமையான கடலினை மேற்கிலும் கொண்ட பரப்பிலே புகழோங்க ஆட்சி புரிந்தவனாகக் காரிகிழார்[5] பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடுகிறார்.

1. மதுரைக்காஞ்சி 70-74, 2. பதிற். 11:20–25 3. பதிற். 4. பதிற் 43: 6–11, 5. புறநா

மேலே குறிப்பிட்ட சான்றுகளும் இவை போன்ற சான்றுகளும் ஆட்சி - அரசியல் வகையிலே பாரதத்தை ஒருகுடைக்கீழ் ஆள நினைத்த குறிப்பைத் தெளிவாக விளக்கு கின்றன. ஆட்சி-அரசியலில் பாரதம் முழுவதும் ஒரு பரப்பாக நடைமுறையில் விளங்குவது நம் காலத்தில்தான் என்பது நம் தலை முறைக்குக் கிடைத்த ஒரு பெருமையாகும். சான்றோர்கள் நெடுங்காலமாக எண்ணிவந்த எண்ணம் எய்தப்பெற்ற வெற்றி மிகப் பெரிதும் போற்றத்தக்க தாகும்

நாகரிகம் - பண்பாடு - மொழி......என்ற வகைகளிலே பன்முகம் கொண்டது பாரதம்: பாரதியார் பாடியவண்ணம் பாரதத்தாய் 'முப்பது கோடி முகம் உடையாள் எனின் மொய்ம்புறவு ஒன்றுடையாள்' :' செப்புமொழி பதினெட்டுடையாள், எனில், சிந்தனை ஒன்றுடையாள்'. இந்த ஒருமைப்பாட்டு உணர்வை மிக நெடுங்காலமாக இந்த நாட்டின் ஏடுகள் வாயிலாகச் சான்றோர்கள் எதிரொலித்திருக்கிறார்கள்,

சங்க இலக்கியங்களை அடுத்துத் தமிழ் இலக்கிய அரங்கிலே வீறு பெற்றொளிர்வது சிலப்பதிகாரம் ஆகும். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் 'குமரியொடு வட இமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட' வனாகச் சிலம்பு[6] குறிக்கும்; அச்சேரனின் மகனாகக் கருதப்படுகின்ற இளங்கோவடிகள் சேரமன்னர்களை[7] 'இமயத்தொடு கொல்லி யாண்டவர்களாகக் குறிப்பிடுகிறார். ஆயினும் தொல்பழங்காலத்திலே எழுகின்ற இத்தகைய குறிப்புகளை உயர்வு நவிற்சியாகவே கொள்ள வேண்டியுள்ளது. போர் வெற்றிகளெல்லாம் ஆட்சிப் பரப்பின் வெற்றியாகுமா என்பது எண்ணிப்பார்க்க வேண்டிய குறிப்பாகும். போர் வெற்றியால் விளைகின்ற வெறியால் பண்பும் பண்பாடும் சிதைந்துவிடக் கூடாது என்பதிலே உறுதி கொண்டவர் இளங்கோ அடிகள். வட திசை மன்னர்களை எதிர்த்துப் போர்செய்யப் புறப்பட்டுப் போகும் செங்குட்டு வனுக்கு முனிவர்கள் சிலர் ஒரு கடமையை நினைவூட்டுகின்றனர்.

.................வான்போர் இமய
நிலயத்து ஏகுதல் நின்கருத் தாகலின்
அருமறை அந்தணர் ஆங்குளர்
வாழ்வோர்
பெருநில மன்ன காத்தல் நின்கடன்

என்பது அந்த முனிவர்களின் கூற்றாகும்[8]. அரசியல் நிலை எதுவாயினும், சமயத் தொண்டர்களாகிய பண்பாட்டுத் துறையினரை ஒருமைப்பாட்டுணர்வோடு பேணவேண்டிய கடமையினைச் சிலப்பதிகாரம் இவ்விடத்தில் வலியுறுத்துகின்றது. இங்கே நம் முன் காட்சி தரும் முனிவர்கள் இமய மலையிலிருந்து பொதிகை மலை நோக்கிச் செல்லுகின்றவர் கள் என்பதையும் மனங்கொள்ள வேண்டும்.

பாரத நாட்டுப் பண்பாடு பன்மையில் ஒருமை காண்பது என்பதைப் பழந்தமிழ்க் காப்பிய மாகிய சிலப்பதிகாரம் இவ்வாறு நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

இலக்கிய உலகிற்கு வடமொழியின் சீரிய பெருங்கொடையாகிய இராமாயணம், இராமபிரானை வடதிசையிலிருந்து தெற்கு நோக்கி நடக்கவைக்கிறது. இராமாயணக் கதையின் மூலத் தொடக்கத்தை ஆராய்ந்த பேரறிஞர்கள் தெரிவித்துள்ள ஒரு கருத்தை இங்கே நினைவுகூர்வது நல்லது. ஆதி இராமாயணத்தில் இராமன் தெற்கு நோக்கி வருவதாக நிகழ்ச்சி இல்லை. காசியிலிருந்து புறப்பட்ட இராமபிரான் இமயமலைக் காடு களிலே பதினான்கு ஆண்டுகள் கழித்துவிட்டு,

6. சிலம்பு. வஞ்சி. வாழ்த்து–உரைப்பாட்டுமடை
7. சிலம்பு–குன்றக்குரவை
8. சிலம்பு–கால்கோட். 100-103

மீண்டும் காசி வந்து முடி சூட்டிக்கொள்கிறுன். இந்த ஆதிக் கதையில் பல மாற்றங்களேச் செய்த வான்மீகியார், இராமபிரானின் திருவடிகளேப் பாரதப் பரப்பு முழுவதிலும் படுமாறு செய்தது ஒரு தனிச் சிறப்பாகும். பாரத ஒருமைப்பாட்டுணர்வுக்கு வான்மீகி செலுத்திய காணிக்கையாக இதனேக் கருதலாம்,

இலக்கிய உலகிற்குத் தமிழ்மொழியின் சீரிய பெருங்கொடையாகிய சிலப்பதிகாரம், கண்ணகி கதையைத் தெற்கும் வடக்கும் அளாவிய ஒன்ருக ஆக்கிக் காட்டுகிறது, இராமபிரானே வடக்கிலிருந்து தெற்கு நோக்கி நடக்க வைத்தது இராமாயணம்; கண்ணகிக்காகத் தெற்கிலிருந்து வடக்கு நோக்கித் தமிழர் படையை நடத்துகிறது சிலப்பதிகாரம். கதைகளின் நிகழ்ச்சிகளுக்கு ஏற்றவாறு சிலசில அமைப்புகளிலே வேறுபாடு சில இருந்தாலும். இரண்டு கதைகளின் முடிவிலும் தெற்கும் வடக்கும் தெளிவான நல்லுணர்வுடன் ஒருமைப்பாடு பேணுவதைக் காணுகின்ருேம்.

இராமபிரானேக் கம்பர் குறிப்பிடும் போது 'தென்சொற் கடந்தான் வடசொற் கலேக்கு எல்லே தேர்ந்தான்' என்று விளக்கி யிருப்பது நம் நாட்டத்திற்கு உரியது.

வட இமயத்தில் வாழும் முனிவர்களேப் பேணவேண்டும் எனச் செங்குட்டுவனின் படையெடுப்பின் போது ஒரு செய்தி செப்புகின்றது சிலப்பதிகாரம். சீதையைத் தேடும் பொருட்டுத் தென்திசைப் படரும் வானரசேனேக்கு ஒரு செய்தி தருகின்றது வான்மீகி இராமாய்ணம். தமிழ் முனிவன் வாழும் பொதிகையை வலமாகச் சுற்றிச் செல்லுமாறு வானர சேனேக்குச் சொல்கிருன் சுக்கிரீவன். தமிழ் முனிவனுக்கு வடமொழி வான்மீகி தந்த மரியாதை இது. வான்மீகத்தில் பல மாற்றங்கள் செய்த கம்பர், இந்த இடத்தில் மாற்றம் எதுவும் செய்யவில்லே.

தென்தமிழ்நாட் டகன்பொதியில்
திருமுனிவன் தமிழ்ச்சங்கம்
சேர்சிற்பீரேல்
என்றுமவன் உறைவிடமாம்

ஆதலின் அம்மலேயை இறைஞ்சி ஏகுமாறு சுக்கிரீவன் தன் சேனேவீரர் களுக்குச் செப்புகிருன்.

வடமொழிஆதி காவியமும் தமிழ் மொழி முதற்காப்பியமும் ஒருமைப் பாட்டுணர்வுக்குத் தந்துள்ள குறிப்புகள் இன்னும் பல உண்டு.

பெருமையாலும் தகுதியாலும் 'பெரிய புராணம்' என்ற சிறப்புப் பெயர் பெற்றது சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம். தமிழகத்து எல்லேக்குள் வாழ்ந்து சிறந்த சிவநெறிச் செம்மல்களின் வரலாறு பாட எழுந்தது பெரிய புராணம். அதற்கு ஆதாரமாயிருந்த திருத்தொண்டத்தொகை, சிவபக்திக்கு எல்லே தமிழக அளவில் நில்லாது என்பதால், 'அப்பாலும் அடிச் சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று பாடியது. சுந்தரரின் அடிச்சுவட்டில் செந்தமிழ் விரித்த சேக்கிழாரும் 'மூவேந்தர் தமிழ் வழங்கு நாட்டுக்கு அப்பால் முதல்வனுர் அடிச்சார்ந்த' அடியவர்களேயும் பேணிப் பாடுகின்ருர்.

சேக்கிழாரின் பெரிய புராணத்தில் காணப்படும் மற்ருெரு குறிப்பினே இங்கே நினேவுகூர்வது நல்லது. நாடு, நகர்,மலே, ஆறு முதலியவற்றைச் சிறப்பித்துப் பாட வேண்டுவது காப்பிய மரபு. பெரிய புராணத்தின் நுவல்பொருள் தமிழகச் சிவனடி யார் வரலாறு; காப்பிய நாயகர் தமிழ் நாட்டுச் சுந்தரமூர்த்தி சுவாமிகள். சேக்கிழார் திருநாட்டுச் சிறப்பில் காவிரி நாடாகிய சோழநாட்டைப் பாடுகிருர். திருநகரச் சிறப்பில் திருவாரூரைப் பாடு கிருர். திருமலேச் சிறப்பில் தமிழக எல்லேக்கு நெடுந்தொலேவு வடக்கில் உள்ள கயிலே மலேயைப் பாடுகின்ருர். 'தன்னே யார்க்கும் அறிவரியான்' ஆகிய சிவபெருமான் மன்னி

வாழும் சிறப்புடையது என்ற அளவில் மட்டும் சேக்கிழார் நிறுத்தவில்லை.

கையில்மான் மழுவர் கங்கைசூழ் சடையில்
கதிரிளம் பிறைநறுங் கண்ணி
ஐயர்வீற் றிருக்கும் தன்மையி னாலும்
அளப்பரும் பெருமையி னாலும்
மெய்யொளி தழைக்கும் தூய்மையி னாலும்

மட்டும் கயிலைச் சிறப்பினைச் சேக்கிழார் சுட்டி அமையவில்லை.

வென்றிடுவண் குடைஅந பாயன்
செய்யகோல் அபயன் திருமனத்து ஓங்கும்
திருக்கயி லாயநீள் சிலம்பு

எனத் தமிழக மன்னனின் மனத்தில் இடம் பெற்றது இமயத்துக் கயிலைமலை என்று சேக்கிழார் குறிப்பிடுவதை ஒருமைப்பாட் டுணர்வுக்கு உரமாக நாம் கொள்ளவேண்டு மன்றோ?

திருநாவுக்கரசர் காலத்தில் காளத்திமலை தமிழகத்து எல்லையில் இருந்தது. கண்ணப்ப நாயனாரால் சமய உலகில் தனிப்பெருமை பெற்றது காளத்திமலை. காளத்திமலையில் எழுந்தருளியுள்ள இறைவனையும் கண்ணப் பரையும் திருநாவுக்கரசர் வழிபட்டார்; உழ வாரப் படையாளராகிய திருநாவுக்கரசர் வழக்கம் போல் அந்தக் காளத்திமலையிலும் திருப்பணி செய்தார். அந்த மலையில் ஆண்டவனை வழிபட்டபோது அவர் உள்ளத் தில் கயிலை மலைக்குச் சென்று வழிபாடு செய்ய வேண்டும் என்ற எண்ணம் எழுந்த தாம். சேக்கிழார் செப்பும் செய்தி இது. தமிழ்நாட்டின் வடக்கு எல்லையிலுள்ள மலையில் வழிபாடு செய்யும் அடியவர்க்குப் பாரதத்தின் வடக்கு எல்லையிலுள்ள இமயத்துக் கயிலைமலை நினைவில் முந்துகிறது.

சேணிலவு திருமலையில் திருப்பணியா யினசெய்து
தாணுவினை அம்மலைமேல் தாள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலம்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்

என்பது சேக்கிழார் திருவாக்கு. இந்திய ஒருமைப்பாட்டுணர்வுக்குச் சேக்கிழார் செலுத்திய காணிக்கை இது.

தத்துவங்களிலே சைவசித்தாந்தம் தமிழ் நாட்டுக்கே உரியது. திருவெண்ணெய் நல்லூராராகிய மெய்கண்டாரின் அருட் கொடை அந்தத் தத்துவம். ஆனால், சைவ மரபு சைவ சித்தாந்தத்தைத் தமிழ்நாட்டு மெய்கண்டாரிலிருந்து தொடங்கியதாக நிறுத்திக்கொள்வது இல்லை. மெய்கண்டா ருக்கு முன் சந்தான குரவர்கள் வழி ஒன்றுண்டு எனக் கூறி, அந்த மரபு, திருக்கயிலை மலையி லிருந்தே தொடங்குவதாகக் குறிப்பிடுவர். ஆனால், மெய்கண்டாருக்கு முந்திய சந்தான குரவர்கள் மானிடரின் புறக்கண் எல்லைக்கு உட்பட்டவராகத் தோன்றவில்லை. அவர்களை அகச் சந்தான குரவர் எனக் குறிப்பர். எப்படி யும் கயிலையில் தொடங்க வேண்டும் என்ற ஆர்வமே இந்த வரலாற்றில் புலப்படுகின்றது. எல்லையறு பரம் பொருளின் வழிப்பட்ட ஒரு தத்துவத்துக்கு எல்லையைக் குறுக்கிவிடுதல் கூடாது என்னும் கருத்து இருந்திருக்க வேண்டும் இடைக்காலத்தில் இமய எல்லை வரையில்தான் பொதுவாக எண்ணம் விரிந்தது. எனவே சைவசித்தாந்தம் இமயத்துக் கயிலையிலிருந்து தொடங்குவதாகச் சான்றோர் குறிப்பிட்டனர். தமிழகத்துச் சைவத் திருமடங்களெல்லாம் 'திருக்கயிலாயபரம்பரை' என்றே குறித்துக் கொள்ளும் மரபுடையன என்பதை நினைவிலே கொள்வது நலம்.

ஒருமைப்பாட்டு உணர்வு என்பது தமிழன் என்ற நிலையிலோ, இந்தியன் என்ற நிலையிலோ ...... ஏன், மானிடன் என்ற

நிலையிலோகூட நின்று விடுவதில்லை; நின்றிடவும் கூடாது. 'ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை' ஓங்கிட வேண்டுமெனக் கனவு கண்டார் வள்ளற்பெருமான். எல்லா உயிர்களையும் தம்முயிர்போல் எண்ணி நடப்பவர் இதயமே இறைவன் திருக்கோயில் என்பது வள்ளலார் திருக்காட்சி.

எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான்
நடம்புரியும்
இடம் எனநான் தெரிந்தேன்

என்பது வள்ளலார் திருவாக்கு.

ஒத்தாரும் உயர்ந்தாரும்
தாழ்ந்தாரும் எல்லாம்
ஒருமையுள ராகிஉல
கியல்நடத்த வேண்டும்

இது வள்ளற்பெருமான் உலகியலளவில் மானிட வருக்கத்தினருக்கு வகுத்துக்காட்டிய ஒருமைப்பாட்டுணர்வு.

பாரத நாட்டுக்குப் பீடும் பெருமையும் ஏற்றிய காந்தியடிகளின் ஒருமைப்பாட்டுணர்வின் எல்லை எது? அவர் மானிட உலகுக்கு வழங்கிய சிறப்பான கொடை எது? - இவ்வினாக்களுக்குப் பாரதியார் தரும் விடை:

தன்னுயிர் போலே தனக்கழி
வெண்ணும்
பிறனுயிர் தன்னையும் கணித்தல்
மன்னுயி ரெல்லாம் கடவுளின்
வடிவம்
கடவுளின் மக்களென் றுணர்தல்
இன்னமெய்ஞ் ஞானத் துணிவினை
மற்றாங்கு
இழிபடு போர்கொலை தண்டம்
பின்னியே கிடக்கும் அரசிய லதனிற்
பிணைத்திடத் துணிந்தனை
பெருமான

பிறப்பெடுத்த மானிடரின் இதயம் விரிவடைந்து 'உயிர்க்குலமெல்லாம் ஆண்டவன் திருவுருவே' என்ற ஒருமைப்பாட்டுணர்வினை அடைய வேண்டும். இது சான்றோர் கண்ட ஒருமைப்பாட்டுணர்வின் எல்லை.

ஏற்றத் தாழ்வு - விருப்பு வெறுப்பு முதலான எல்லைகளைத் தகர்த்தெழுந்து ஓங்கி உயர்ந்து பாரித்துப் பெருகிப் பரம் பொருளிலேயே எல்லாவற்றையும் இணைத்துக் காண்பதே சான்றோர் கண்ட ஒருமைப்பாடு ஆகும்.

(கோவை வானொலியில் 19—5—75-ல் ஒலிபரப்பிய பேச்சு)

*''வாழ்க வையகம்*
*வாழ்க வளமுடன்''*




**நன்னெறிக் கழகம்**

கோவை நகரின் பண்பாட்டுச் செல்வம் —
தமிழகம் நன்கு அறிந்த அரங்க நாயகம் —

தெய்வத்தின் திருவருள்
சான்றோரின் வாழ்த்து
அறிஞர்களின் ஒத்துழைப்பு
செல்வர்களின் ஆதரவு
பெருமக்களின் ஊக்கம்
— இவற்றால்

சமயம்
இலக்கியம்
பண்பாடு
— ஆகிய
துறைகளில்

சிறப்புற —
மகிழ்ச்சி பரவ —
பயன் கனிய
பாராட்டுக்கு உரியவகையில்
திருப்பணிகள் ஆற்றி
இன்று

**வெள்ளி விழாக்**

**கொண்டாடுகிறது.**

இந்த
நல்ல நிறுவனம்
நற்பணி புரிவதற்கு
இதுகாறும் உதவியவர்கள் —
இனிமேலும் உதவுகிறவர்கள்
யாவர்க்கும்




நன்றி! நன்றி! நன்றி!



# WELCOME ADDRESS

**Shri G. K. SUNDARAM**

*Your Excellency Shri S. L. Khurana, Shri C. Subramaniam, Distinguished Guests, Ladies and Gentlemen,*

On behalf of the Reception Committee and on my own behalf I have great pleasure in offering a warm welcome to His Excellency to the Silver Jubilee Function of the "NANNERI KAZHAGAM". Sir, we are extremely grateful to you for having readily consented to inaugurate the Silver Jubilee Celebrations this evening.

To preside over this function, it is our good fortune to have Shri C. Subramaniam, Past Finance Minister, Government of India, who has been associating himself with this organisation ever since it was established more than two decades ago. On behalf of the Reception Committee and on my own behalf, I extend to you, Sir, a warm welcome.

The Nanneri Kazhagam has been functioning in Coimbatore for the last twenty seven years. It has been run by people who imbued with a spirit of altruism, wanted constantly to remind the people the path of rectitude, ethically based and culturally indegenous, followed for centuries past by our forefathers. Through literatures, lectures, debates and the like, this Kazhagam has striven hard to draw the attention of the public to the treasures of knowledge contained in our religious literature, the Vedhas, Upanishads, Epics, the works of Nayanmars and Alwars.

It is natural for any society to deteriorate. Most of them, we find, seek pleasures of the senses and choose the path of least resistance to attain their objectives which are often too low. The lower types of humanity in all nations find pleasure in the senses, while the cultured and the educated find it in thought, in philosophy, in arts and sciences. Spirituality is a still higher plane. It takes a long time for people to attain that plane. Such people who attain that plane set the bases of the mores of society, the culture of the society. Generation after Generation, this should go on if this culture should be preserved.

But in active work-a-day life of ours, it is not easy especially in a fast changing world like ours. The impact of alien culture tends to make our culture a mixed one. Purity of our ancient culture is watered down. Soon, one loses understanding of the past mores and manners and is unable to understand why he does certain things handed down to him by his forefathers. He is often indoctrinated into thinking that what he so does are all more superstitions. In modern times, "If a man quotes a Sankara or a Buddha or a Christ, he is laughed at. But let him give the name of "Darwin" and it is swallowed. That was a religious superstition and this is

At the Silver Jubilee Celebrations of Nanneri Kazhagam on 9th July, 1983

a scientific superstition. Religious belief is No. 1. All scientific knowledge are 'O' s; when they combine together they add value like 10, 100, 1000 etc.

If you give up a habit (considering it a superstition) you feel guilty as though you have done something wrong. But when you start doing it again, you feel happy; but still you do not know why you are doing it. As long as you do not know the reason, you feel what you do is a burden; but if you consider it is not a burden, you feel happy though you may still be ignorant of its import. When you learn the reason why you do it and how good it is for the mind as well as the body, your joy knows no bounds. You, then, start telling others that they are no longer superstitions and you find joy even in telling. It takes a long time to learn this. This has to be taught to the young. Unfortunately there is no moral education in our schools now. All mass media tell them more about evils; newspapers give them detailed versions of theft, kidnap and murder. Cinema houses spread such stories very fast and drive home such ideas into young minds, they start practising them in thier day-to-day life, only to get wide publicity in the bargain. Therefore, such forces acting on the society are so contageous that deterioration of society is very fast indeed.

Now, how to stop deterioration? Reform the education and enthrone moral and spiritual values. Tell the people that steadfast adherence and unswerving loyalty to the Moral Law only can resucitate them. Countless and Rishis and Munis from time immemorial have tried to lead their followers in the path of righteousness. Generation after generation, after their self-realisation, the Godmen have given us inspiration and guidance in meaningful and purposeful living. Our cultural heritage is not the exclusive preserve of any particular section or religion; it is the common inheritance of humanity as a whole I read in the papers a few days ago that "Samantha Smith, a 11- year old girl asks the President of Russia to promise that Russia will not start a war". This universal character of our heritage must be driven home by precept and practice to all sections. All must realise, if Indian culture is neglected and decadence sets in, it will not be a mere sectional loss, but a national, indeed a universal tragedy.

Let me conclude with quoting the great Swami Vivekananda "Be moral, Be Brave. Be a heart - whole man strictly moral; brave unto desperation." If so, without loosing time to decide on what is moral, let us give our youngsters at primary, high school and college levels and through informal education to the vast majority of the people outside of those institutions, a glimpse into our glorious culture and spiritually based right conduct. It is an urgent need. It is on this score that such organisations like the Nanneri Kazhagam have a vital role to play in spreading the moral principles in day-to-day life. Any number of such organisations can do such service till they are able to overcome the evil forces that set the society into degeneration.

I have great pleasure in welcoming you all and I would now request Shri C. Subramaniam to take the Chair.

Thank you. 




# நன்னெறிக் கழகம்

கோயமுத்தூர்

## வெள்ளி விழா அறிக்கை

**9-7-1983**

நல்ல செயல்கள் செய்வது. செய்வதைப் பாராட்டுவது தமிழர் பண்பு. அதுவும் தொடர்ந்து 27 ஆண்டுகளாக நாடு இனம், மொழி கடந்து, மனிதகுல உயர் நலனுக்காகத் தமிழ், இலக்கிய, பண்பாட்டு நன்னெறிகளைமூச்சாக, பேச்சாக, செயலாகச் செய்துவரும் நன்னெறிக் கழகத்தின் வெள்ளிவிழா அறிக்கையினை உங்கள் முன் பெருமையுடன் படைக்கின்றேன்.

1956 - ஆம் ஆண்டு மே மாதம் 6 - ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று கோவை M/s. K. R. & Sons நகைக் கடை மாடியில் கவியரசு திரு. கு. நடேச கவுண்டர் அவர்கள் தலைமையில் ஏறத்தாழ 20 அங்கத்தினர்கள் கூடி உருவாக்கிய அமைப்புத் தான் இந்த "நன்னெறிக் கழகம்"

நாடு, மொழி, சமயம், இனம் என்ற வேறுபாடு இல்லாமல் அரசியல் கொள்கை களுக்கு அப்பாற்பட்டு, நன்னெறியில் நின்று மனிதகுல உயர்வுக்காக உழைப்பதே இதன் நோக்கம். இந்த நோக்கம் இசையாலும், இசைப்பேருரைகளாலும், பண்பட்ட, இலக்கிய, பக்திச் சொற்பொழிவுகளாலும் மக்களுக்கு விளக்க, மாதம் ஒரு விழா எனத் திட்டமிட்டு இக்கழகம் தொண்டாற்றி வருகிறது.

இந்து, கிறிஸ்தவம், இஸ்லாம், ஜைனம், பௌத்தம் முதலிய சமய நூற்களிலும், தென்னிந்திய வடஇந்திய, மேல்நாட்டு மொழிநூல்களில் அமைந்துள்ள புனிதமான நல்லுரைகளையும் மக்கள் கேட்டு, உணர்ந்து, அனுபவித்து உயர்நலம் பெறத் தொடர்ந்து சிறப்பு நிகழ்ச்சிகள் அமைத்து விழாக்கள் நடத்தப்பட்டு வருகின்றன.

நன்னெறிக் கழகம் சொற்பொழிவுகளோடு நிறுத்திக்கொள்ளாமல், பிரபந்தங்கள் சிலவற்றை இலவச வெளியீடாக வெளியிட்டும் மக்கட்கு வழங்கியுள்ளது.

நன்னெறிக் கழக விழாக்களில் கலந்துகொண்டு நாநலம் காட்டி நாட்டுக்கும் மக்கட்கும் நன்னெறி வழங்கி யுள்ளோர்கள் பட்டியல் விரிப்பின் பெருகும், நன்னெறிக் கழக வளர்ச்சிக்குத் துணைபுரிந்து உதவிய பெரியவர்கள் அனைவரும் தமிழ் நலம் சான்ற சான்றோர்கள்.

நன்னெறிக் கழகம் 26-8-1956 ஆம் தேதி திரு. V. C. சுப்பையா கவுண்டர் அவர்கள் தலைமையில் தவத்திரு, குன்றக்குடி அடிகளார் அவர்களால் துவக்கப்பட்டது. பின் செப்டம்பர் மாதம் திரு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் தலைமையில் எடுத்த முதல்விழா பைந்தமிழ்க் கவிஞன் பாரதிக்கு அமைந்தது. அன்றுமுதல் வெள்ளி விழாக் காணும் இன்றுவரை இதன் புரவலராக இருப்பவர் வைஸ்ய பூஷணம் திரு. P.A. இராஜு செட்டியார் அவர்கள், செயலாளராக இருப்பவர் திரு. தா. பாபுராஜீ அவர்கள். நிர்வாகக் குழு உறுப்பினராக இருப்பவர் திரு K. தேசிகாச்சாரியார் அவர்கள். இதன் தலைவர்

களாகத் திரு P.S.S. சோமசுந்தரம் செட்டியார், செந்தமிழ் அருட்செம்மல் திரு P.S.G.G. கோவிந்தசாமி நாயுடு, திரு. N. வரதராஜுலு நாயுடு ஆகியோர் இருந்தார்கள். 1982 ஆம் ஆண்டு முதல் தலைவர் பொறுப்பினை நான் எற்றிருக்கிறேன்.

நன்னெறிக் கழக நிகழ்ச்சிகளில் சகல மதங்களையும் சார்ந்த அருளாளர்கள், மூதறிஞர் இராஜாஜி, ஜஸ்டிஸ் P.S. கைலாசம், ஜஸ்டிஸ் S. கணபதியாபிள்ளை, ஜஸ்டிஸ் S. சுப்பிரமணிய நாடார், ஜஸ்டிஸ் பஷீர் அஹமது சையத், ஜஸ்டிஸ் M.M இஸ்மாயில், ஜஸ்டிஸ் P.R. கோகுல கிருஷ்ணன், ஜஸ்டிஸ் S. நடராஜன், ஜஸ்டிஸ் இராமானுஜம், ஜஸ்டிஸ் R. செங்கோட்டுவேலன், ஜஸ்டிஸ் சாமிக்கண்ணு, திரு C.R. நடராஜன், தொண்டர் குலசேகரன், கம்பன்அடிப்பொடி திரு. சா. கணேசன், போன்ற மேதைகள்; Dr. T.M.P. மஹாதேவன், Dr. T.P. மீனாக்ஷிசுந்தரம், Dr. தா. ஏ. ஞானமூர்த்தி Dr. M.R.P. குருசாமி, Dr. S. சிவகாம சுந்தரி போன்ற அறிஞர்கள் பல்கலைக்கழகத் துணை வேந்தர்கள், இசை மேதைகள், இசைச் சொற் பொழிவாளர்கள். கிராமியக்கலை விற்பன்னர்கள், டாக்டர் பட்டம் பெற்ற ஆராய்ச்சியாளர்கள், பல்துறையைச் சார்ந்த பேராசிரியர்கள் பலரும் இவ்விழாக்களில் கலந்துகொண்டுள்ளனர்.

கல்வியிற் சிறந்த கவிஞர்கள், பண்பாடு உணர்த்தும் புலவர்கள், தமிழகக் கலைஞான மேதைகளுக்கு மட்டும் விழா எடுக்காமல் ஆங்கில, பிரெஞ்சு, ஜெர்மனி, வடமொழிக் கவிஞர்கள், நாடக ஆசிரியர்கள், திறனாய்வாளர்களுக்கும் இக்கோவை நகரத்தில் விழா எடுத்துள்ள பெருமை நன்னெறிக் கழகத்திற்கே உண்டு.

இவை தவிர, தமிழ்மொழி இலக்கிய வளர்ச்சிக்கெனச் சிறப்பாக தொண்டாற்றி வரும் அறிஞர் பெருமக்களுக்குத் ''தமிழறிஞர்'' எனப் பட்டம் வழங்கிப் பாராட்டும் பெருமையினையும் இக்கழகம் செய்து வருகிறது.

நன்னெறிக் கழகம் இதுவரை, சொல்லின் செல்வர் டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளை; பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர் டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்; கலைமணி திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன், தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம், கோவைகிழார் திரு C.M. இராமச்சந்திரன் செட்டியார், தொண்டர் குலசேகரன் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன், சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சிவஞானம், பேராசிரியர் அ. சீனிவாசராகவன், டாக்டர். தா. ஏ. ஞானமூர்த்தி, திரு. D. இராமசாமி அய்யங்கார், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர் இராஜம்மாள் தேவதாஸ், சிந்தாமணிச் செல்வர் மே. வீ. வேணுகோபால் பிள்ளை, திரு. நீ. கந்தசாமி பிள்ளை; டாக்டர் T. M. P. மகாதேவன், ஜஸ்டிஸ் திரு S. மகாராஜன்; ஜஸ்டிஸ் M. M. இஸ்மாயில், திரு. பெரியசாமித் தூரன் ஆகிய அறிஞர்களுக்குப் பாராட்டு வழங்கிப் பொற்பதக்கம் அளித்துச் சிறப்பித்துள்ளது. இன்றைய இந்த வெள்ளிவிழா நிகழ்ச்சியிலும் பதினேரு அறிஞர்களைச் சிறப்பிக்கவிருக்கிறது.

நன்னெறிக்கழகத்தின் செம்மை மிகுந்த சீர்சான்ற தமிழ் இலக்கியப் பணியினை இருப்பத்தேழாண்டு வெள்ளிவிழா வளர்ச்சியினை விரித்துரைப்பின் பெருகும். காலம் நோக்கி இந்த வெள்ளிவிழா வளர்ச்சிக்குத் துணைபுரிந்த அனைவரும் பொன்விழா வளர்ச்சிக்கும் துணைபுரிய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, எல்லாச் சிந்தனைகட்கும், செயல்கட்கும் மூல காரணமாக விளங்கும் முழுமுதற் கடவுளின் பேரருள் வேண்டி வணங்கி இவ்வறிக்கையினை உங்கள்முன் வைக்கிறேன்.

Dr. J. துல்ஜாராம் ராவ்

தலைவர்

நன்னெறிக் கழகம்

1 

## கோயமுத்தூர்
## நன்னெறிக் கழகம்,
## 9 & 10-7-83 உ வெள்ளி விழா

1) திருமதி மோகனு B.A.,
இறைவணக்கம்

2) மேதகு ஆளுநர் திரு S. L. குரானு அவர்கள் விழாவுக்கு வருகையில் மணி மேல் நிலைப்பள்ளி குழந்தைகள் வரவேற்பு.
தாளாளர் திரு N. சின்னச்சாமி நாயுடு உடன் இருக்கிருர்.

3, 4) மேதகு ஆளுநர் திரு S.L. குரானு அவர்கள் சாரணர் அணிவகுப்பு மரியாதையை ஏற்கிருர்.

 2

4 

 3

## கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83 உ வெள்ளி விழா

1



2



4



3



1) விழா மேடையில் அறிஞர் பெருமக்கள்
2) விழா மேடையில் அறிஞர் பெருமக்கள்
3) கழகம் தலைவர் Dr. J. துல்ஜாராம்ராவ் அறிக்கை படிக்கிறார்.
4) வேளாண் பல்கலைக்கழகம் துணைவேந்தர் Dr. A. வெங்கட்டராமன், மலர் வெளியீட்டுரை நிகழ்த்துகிறார்.

# கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83வ வெள்ளி விழா

1 

2 

4 


3 


1) மேதகு ஆளுநர் திரு S. L. குரானு துவக்க உரையாற்றுகிருர்.
2) விழாத்தலைவர் திரு C. சுப்பிரமணியம் தலைமை உரையாற்றுகிருர்.
3) மேதகு ஆளுநர், மகாவித்வான் திரு ச. தண்டபாணி தேசிகருக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.
4) மேதகு ஆளுநர், திரு A. V. சுப்பிரமணியனுக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.

கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83 வ வெள்ளி விழா

1 

 2

4 

 3

1) மேதகு ஆளுநர், மேதகு ஜஸ்டிஸ் திரு R. செங்கோட்டுவேலனுக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.
2) மேதகு ஆளுநர், Dr. M. R. P. குருசாமிக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.
3) மேதகு ஆளுநர், திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.
4) மேதகு ஆளுநர், திருமதி சௌந்தரா கைலாசத்துக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிருர்.

## கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83உ வெள்ளி விழா

1




2




4




3




1) மேதகு ஆளுநர், நன்னெறிக்கழகம் ஆஸ்தான வித்வான் புலவர் S. K. ராமராஜனுக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிறார்.
2) மேதகு ஆளுநர், பேராசிரியர் சாலமன் பாப்பையாவுக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிறார்.
3) மேதகு ஆளுநர், Dr. S. சிவகாம சுந்தரிக்கு 'தமிழறிஞர்' விருது வழங்குகிறார்.
4) மேதகு ஆளுநர், அவர்களுக்கு திரு G.K. சுந்தரம் விழா நினைவுச்சின்னம் வழங்குகிறார்.

## கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83 வ வெள்ளி விழா

மேதகு ஆளுநர் திரு G. K. சுந்தரம் அவர்களிடம் விடைபெறுகிறார்.



விழா மண்டபத்தில் ஆண்கள் பகுதியில் ஓர் பாகம்.



விழா மண்டபத்தில் பெண்கள் பகுதியில் ஓர் பாகம்.



## கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83 உ வெள்ளி விழா

1




2



4



3



1) பட்டி மன்றம், விழா மேடை.
2) முதல் அணி தலைவர் திரு சாலமன் பாப்பையா, செல்வி புவனேஸ்வரி, புலவர் இளங்கோ.
3) இரண்டாவது அணி தலைவர் திரு மு. கணபதி, புலவர் மணியன், திருமதி புவி. பாக்யலக்ஷ்மி.
4) மூன்ருவது அணி தலைவர் திருமதி Prof. B. சரோஜினிதேவி, திருமதி மனோன்மணி, திரு இருசுப்பிள்ளை.

## கோயமுத்தூர் நன்னெறிக் கழகம், 9 & 10-7-83 உ வெள்ளி விழா

1



2

4




3

1) தவத்திரு சுந்தரம் ஸ்வாமிகள், பொருள் காப்பாளர் திரு V. V. ஸ்ரீராமனுக்கு நினைவுச்சின்னம் வழங்குகிறார்.
2) தவத்திரு சுந்தரம் ஸ்வாமிகள், துணைச்செயலாளர் திரு P. ராமசாமிக்கு நினைவுச்சின்னம் வழங்குகிறார்.
3) வரவேற்பு கமிட்டித்தலைவர் திரு G. K. சுந்தரத்துக்கு போஷகர் திரு S. N. R. சின்னசாமி நாயுடு மலர்மாலை அணிவித்து, நினைவுச்சின்னம் வழங்குகிறார்.
4) செயலர் திரு தா. பாபுராஜுக்கு வரவேற்பு தலைவர் திரு G. K. சுந்தரம் நினைவுச்சின்னம் வழங்கி பொன்னாடை போர்த்தி பாராட்டுகிறார்.



# வெள்ளிவிழா நடவடிக்கை குறிப்பு

கொங்கு நாட்டின் தலைநகராகிய கோவையில் ஒரு தலைமுறைக் காலத்துக்கு மேலாகச் சீரிய பணியாற்றி வருகின்ற நம் நன்னெறிக் கழகத்தின் வெள்ளி விழா 9—7—1983, 10—7—1983 ஆகிய இரண்டு நாட்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. பொதுவாகத் தமிழக வரலாற்றிலும் குறிப்பாகக் கொங்குநாட்டு வரலாற்றிலும் கொடுமுடியான சிறப்பு முத்திரை பதிப்பதாக விழா அமைந்தது.

விழா நடைபெற்ற மணி மேல்நிலைப் பள்ளிச் சூழலும், விழா அரங்கமும் கொண்ட விழாவணிக் கோலம் எவர் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் அமைந்திருந்தது.

மரபு போற்றும் பண்பாட்டு நெறிப்படி இறைவணக்கத்துடன் விழா தொடங்கியது. விழா அரங்குக்கு வருமுன், மணிமேனிலைப் பள்ளியின் தேசிய இளை மாணவர் படையினரின் அணிவகுப்பு மரியாதையினை மாநில ஆளுநர் மேதகு குரானா ஏற்று வந்தார்.

வெள்ளி விழாக் குழுவின் தலைமைப் பொறுப்பினை ஏற்று, விழா நிகழ்ச்சிகளின் பெருவெற்றிக்குப் பேராதரவாக அமைந்த திருமிகு ஜி. கே. சுந்தரம் அவர்கள் நயமும் பயனும் அமைந்த கருத்துரைகள் கொண்ட வரவேற்புரை நல்கினார். (வரவேற்புரை தனியே இம்மலரில் வெளியிடப்பட்டுள்ளது).

அடுத்து, நன்னெறிக் கழகத்தின் தலைவர் திருமிகு டாக்டர் துல்ஜாராம் ராவ் அவர்கள் கழகத்தின் பணிகளைத் தொகுத்துக் கூறி அறிக்கையினை அவைமுன் படைத்தார். (தனியே இம்மலரில் வெளியிடப்பட்டுள்ளது).

பின்னர் மாநில ஆளுநர் மேதகு குரானா அவர்கள் வெள்ளி விழா நிகழ்ச்சிகளைத் தொடங்கிவைத்தார். தம் தொடக்கவுரையில் மேதகு ஆளுநர் கூறிய கருத்துக்களில் சிறப்பாகக் குறிக்கத்தக்கது, மானிட சமுதாயத்தில், குறிப்பாகப் பாரத சமுதாயத்தில் பிறர் கருத்தை மதித்துப் போற்றும் பான்மை குறைந்து விட்டதே என்ற அவலக் குறிப்பாகும். பிறர் கருத்தை மதிப்பது பண்பட்ட சமுதாயத்தின் இயல்பாகும். ஆனால், வரவர இந்த நற்பண்பு குறைந்து கொண்டே போகிறதே என வருந்திய அவர், வாழ்க்கையில் விருப்பமான கருத்துகளுக்கு இடம் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார். வாழ்வின் விழுமிய கருத்தோட்டங்களே செம்மை தரவல்லது என்பதை மக்களிடையே தொடர்ந்து நினைவூட்டி வருகின்ற நன்னெறிக் கழகத்தின் சிறப்பான பணியைப் பாராட்டி வாழ்த்தி விழா நிகழ்ச்சிகளை மேதகு ஆளுநர் தொடங்கி வைத்தார்.

விழாவுக்குத் தலைமை ஏற்ற முன்னாள் அமைச்சர் திருமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் நன்னெறிக் கழகத்தின் திருப்பணிகளை நன்கு அறிந்தவர். அதன் பணிகளை நினைவு கூர்ந்து, வெள்ளி விழாக் கொண்டாடும் வாய்ப்பினைப் பெற்ற அமைப்பு என்ற பெருமை பெற்ற கழகத்தை வாழ்த்தினார். அவருடைய தலைமையுரையில் பின்வரும் கருத்து மையமாக அமைந்திருந்தது. முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் உருவாக்கப்பட்ட அரசியல் அமைப்பிலே பாரதம் முழுவதற்கும் இந்தியே பொது மொழி என வகுக்கப்பட்டது. 35 ஆண்டுகள் கழிந்த பின்பும் அந்தக் கருத்தினை ஏற்றுக் கொள்ளக்கூடிய சூழ்நிலை உருவாகவில்லை

என்பதை உணர்கிறோம். பாரத நாட்டின் நன்மையையும் வலிமையையும் கருதி அந்தப் பழைய நிலையினை மாற்றிக் கொள்ளவேண்டிய சூழ்நிலை உருவாகியிருக்கிறது. பாரத சமுதாயம் முழுமைக்கும் ஏற்புடையதான ஒரு மொழிக்கொள்கையை விரைவில் உருவாக்க வேண்டிய கால கட்டம் வந்துவிட்டது,''

பதினொரு சான்றோர்கள் நன்னெறிக் கழகத்தின் **"தமிழ் அறிஞர்"** விருதினைப் பெற்றனர். அவ்விருதுக்கு உரிய அழகான கேடயங்களை அறிஞர்களுக்கு மேதகு ஆளுநர் வழங்கிச் சிறப்பித்தார். அறிஞர் பெருமக்களைப் பாராட்டிப் பாமடல் வழங்கினார் திரு என். பார்த்தசாரதி அவரைத் தொடர்ந்து திரு. வி. வி. ஸ்ரீராமன், விருது பெறும் அறிஞர்களை அவைக்கு அறிமுகப் படுத்தினார். கௌமார மடம் ஆதீனகர்த்தர் தவத்திரு சுந்தர சுவாமிகள் நன்னெறிக் கழகத்தின் பணிகளைப் பாராட்டி விருது பெறும் தமிழறிஞர்களுக்கு வாழ்த்துரை வழங்கினார். விருதுபெற்றவர்களின் சார்பிலே மகாவித்துவான் தண்டபாணிதேசிகர் ஏற்புரை நிகழ்த்தினார்.

விருதுபெற்ற சான்றோர்கள் பெயர்கள் வருமாறு :

ஜஸ்டிஸ் மேதகு ஆர். செங்கோட்டுவேலன்
மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்,
பேராசிரியர் கு. அருணாசலக்கவுண்டர்,
புலவர் கா. நயினார் முகம்மது,
திருமதி சௌந்தரா கைலாசம்,
திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு,
டாக்டர் ம. ரா. போ. குருசாமி,
திரு ஏ வி. சுப்பிரமணியன்,
புலவர் எஸ். கே. இராமராசன்,
பேராசிரியர். சாலமன் பாப்பையா,
டாக்டர் சு. சிவகாமசுந்தரி

வெள்ளிவிழா மலரினை வேளாண்மைப் பல்கலைக் கழகத்துணைவேந்தர் டாக்டர் ஏ. வேங்கடராமன் வெளியிட்டார். வெறும் மரபுச் சடங்காக அமைத்து விடாமல், மலரில் வெளியாகியுள்ள எழுத்தோவியங்களின் கருத்துக்களைப் பற்றித் தெளிவான மதிப்புரை வழங்கினார். மலரினை ஏற்ற தர்மப்பிரவர்த்தனா திருமிகு சி. பி. முத்துசாமிச் செட்டியார் கழகத்தின் பணியினைப் பாராட்டிப் போற்றினார்.

தொடக்க விழாவின் இறுதியில் தொழிலதிபர் - கல்வித் தொண்டர் - சமயத் திருப்பணியாளர் அரசியல் சிந்தனையாளர் - பொருளாதார நுண்ணியலாளர் என்ற பல தகுதிகளையுடைய அருட்செல்வர் திருமிகு நா. மகாலிங்கம் அவர்களும், கல்வியுலகின் பாராட்டைப் பெற்ற சிறப்புடையவர் என்ற தகுதி மிக்க திருமிகு சை. வே. சிட்டிபாபு (அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர்) அவர்களும் வெள்ளிவிழாப் பேருரைகளை நிகழ்த்தினர்.

திரு. பி. இராமசாமியின் நன்றியுரையுடன் தொடக்கவிழா நிறைவெய்தியது.

இரண்டாம் நாள்விழா நிகழ்ச்சி 10-7-83 ஞாயிறு காலையில் பேரவையாக நிகழ்ந்தது. தர்மப்பிரவர்த்தனா திரு C. B. முத்துசாமி செட்டியார் வரவேற்புரைக்குப்பின் மேதகு நடுவர் செங்கோட்டுவேலன் தலைமை தாங்கி அரிய இலக்கியச் சிந்தனைகள் கொண்ட விரிவுரை ஆற்றினார். திரு ஏ. வி. சுப்பிரமணியன் ''இலக்கியமும் சமூகப் பயன்பாடும்'' என்ற தலைப்பிலே இலக்கியப் பேருரை நிகழ்த்தினார். சங்க இலக்கியப்பாக்களைக் கேட்பார் மனங்குளிர ஏற்க - அறிவு அவர் ஆற்றிய விரிவுரை தென்றல்போல அமைந்தது. அடுத்து டாக்டர் சிவகாமசுந்தரி 'சமயம் திருத்தும் வாழ்வு' என்ற தலைப்பில் ஆணித் தரமான கருத்துக்களை உரம் ஏறிய சொற்களிலே வழங்கினார். இறுதியாகப் பேரா. சை. வே. சிட்டிபாபு 'வரலாறு வகுத்த நன்னெறி' என்ற தலைப்பிலே சிரிப்பும் சிந்தனையும் மிகுந்த வரலாற்று/இலக்கியச் சீருரை வழங்கினர்.

திரு. எஸ். இராமசாமியின் நன்றியுரையோடு வெள்ளிவிழாப் பேரவை நிகழ்ச்சிகள் நிறைவுற்றன.

அன்று மாலை சூடும் சுவையும் சுறுசுறுப்பும் செறிந்த பட்டிமன்றம் வெள்ளி விழாவின் நிறைவு நிகழ்ச்சியாக நடைபெற்றது. Dr ம. ரா. போ. குருசாமி அவர்கள் வரவேற்புரையுடன் விழா ஆரம்பமாகியது.

பட்டிமன்றத்தை அனைத்திந்திய வானொலியின் கோவை நிலைய நெறியாளர் திருமிகு கோ. செல்வம் தொடங்கிவைத்தார்.

தமிழ்த் துறைக்கும் சமயத்துறைக்கும் ஒரு கலங்கரை விளக்கெனத் திகழும் கௌமார ஆதீனத் தலைவர் தவத்திரு சுந்தரசுவாமிகள் பட்டிமன்ற நடுவராக அமைந்தார்கள்.

சமுதாய நன்னெறியைக் கெடுப்பவற்றுள் தலைநிற்பது இன்றைய அரசியலா? இன்றைய திரைப்படமா? இன்றைய கல்வி முறையா? என்ற பொருளில் பட்டி மன்றம் நிகழ்ந்தது.

பேராசிரியர் சாலமன் பாப்பையாவின் தலைமையில் செல்வி புவனேசுவரி, புலவர் இளங்கோ ஆகியோர் அரசியலே என்னும் அணிக்கு வலிமையூட்டி வாதிட்டனர்.

திருமுறைச் செல்வர் திரு. மு கணபதி அணித்தலைமை ஏற்க, செல்வி புவி. பாக்கியலட்சுமியும் புலவர் மணியனும் திரைப்பட அணிக்காக வாதாடினர்.

கல்வியே என்னும் அணிக்குப் பேராசிரியர் ந. சரோஜினிதேவி தலைமை ஏற்றார். திருமதி மனோன்மணியும் திரு. ஆர். இருசுப்பிள்ளையும் அவ்வணிக்குத்துணை நின்றனர்.

பட்டிமன்றம் தரம் குன்றாமல் பயனும் வலிமையும் மிக்க வாதங்களால் அழகுற நடைபெற்றது. தரம் குறையாமலே சூடும் சுவையும் பரிமாற முடியுமென்பதற்கு சான்றாக நம் வெள்ளி விழாப்பட்டிமன்றம் நடைபெற்றது.

இறுதியில் தவத்திரு சுந்தரசுவாமிகள் வாதங்களைக் கணித்துத் தொகுப்புரை வழங்கி, வாதங்களின் குறை நிறைகளை ஏற்றபெற்றி எடுத்துக்காட்டி, சமுதாய நன்னெறியைக் கெடுப்பவற்றுள் தலைநிற்பது இன்றைய திரைப்படமே எனத் தீர்ப்பு வழங்கினார்.

பட்டிமன்றத் தீர்ப்பின் முன்னர் நன்னெறிக்கழகத்தின் பணிகளின் உந்து சக்தியாகவும் இயங்கும் சக்தியாகவும் தொடக்கத்திலிருந்து அமைந்த திருமிகு தா. பாபுராஜு அவர்களைவிழாக்குழுத் தலைவர் பொன்னாடை போர்த்திச் நினைவுச் சின்னம் வழங்கிச் சிறப்பித்தார். கழகத்தின் பணிகளில் பங்கு கொண்டு சிறப்பித்த ஊழியர்களுக்கு நன்னெறிக் கழகம் நினைவுக் குறிகள் வழங்கிப்போற்றியது. செயலர்திரு பாபுராஜு நன்றியுரையுடன் கூட்டம் இனிது முடிந்தது.

---

ஓம் நமோ நாராயணாய

தா. பாபுராஜன்,

சிவானந்தா நகர் (ஹிமாலயா)
5—1—1960

பிரிய ஆத்மன்,

விழா என்பது கொண்டாட்டத்தைக் குறிப்பதாகும். நம் நாட்டில் திருவிழாக்கள் பல கொண்டாடப்படுவது சர்வசகஜமாகும். விழாவினால் பண்டைய மக்களின் பெருமையை நினைவு கூர்ந்து கொள்கிறோம். இத்தகைய விழாக்கள் நமக்குப் புத்துணர்ச்சியைக் கொடுக்கிறது.

இவ்விழாக்களினால் நாம் பாடல்களைப் பாடி பெரியோர்களின் வாழ்க்கையை ஒரு முறையாவது நினைவுபடுத்திக்கொள்கிறோம். விழாக்கள் பல நடக்கவும், அதன் மூலமாக ஆன்மீகம் பரவவும் திருவருள் கிடைக்க வேண்டுகிறேன். ஓம் சாந்தி

தங்களாத்மா
(Sd) சிவானந்தா